GURUDEV

# சுராணா



ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

(முந்தைய பெயர் S.U.S. ஃபைனான்ஷியர்ஸ் (இந்தியா) லிமிடெட்)

Group of Surana

1971 முதல்

## இரும்பு போன்ற உறுதி, தங்கம் போன்ற நாணயம் கொண்ட குழுமத்தின் ஒரு அங்கம்.

## சுராணா அளிக்கும் முதலீடு திட்டங்கள்

## ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

CARE
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(B B B +)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு 1996-97-ல் ரூ.175 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹயர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

### SCHEME 1 - FIXED DEPOSITS

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12<br>24<br>36<br>48<br>60 | 15.00% (Monthly)<br>15.19% (Quarterly)*<br>15.48% (Half-yearly)* |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 2 - GURUDEV CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 3 - SURYODAY CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.


**சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்**

குரூப் ஆப் சுராணா

நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி,
சென்னை - 600 014.
போன் : 8522596 / 8526581 / 8522753 / 8522684 / 8525396 / 8525694 / 8525596
ஃபாக்ஸ் : (044) - 8520587.

**கிளைகள் : திருச்சி**: 'TAB காம்ப்ளெக்ஸ்', முதல் தளம், 32-B, வில்லியம்ஸ் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சி-620 001. போன்: 461821; **கொள்ளிடம்** : 7/157, மெயின் ரோடு, கொள்ளிடம்-609 102. போன்: 77454; **சங்கரன்பந்தல்** : 3/10-A, மெயின் ரோடு, சங்கரன்பந்தல்-609 308. போன்:85423, 85536; **பெங்களூர்** : 302, 3-வது தளம், ஸ்விஸ் காம்ப்ளெக்ஸ், 33, ரேஸ்கோர்ஸ் ரோடு, பெங்களூர்-560 001. போன்: 2281143; **எர்ணாகுளம்**: 2-வது தளம், பெய்ர்மின்ட் சதன், நெ.39/4232 எம்.ஜி. ரோடு, ரவிபுரம், எர்ணாகுளம், கொச்சின்-682 016. போன்: 374617; **கோயம்புத்தூர்**: முதல் தளம், செட்ரோஸ் டவர்ஸ், 424-A, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர் ஆகிய இடங்களில் உள்ளன.


29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420

### இந்த வருடம் அர்ஜுனா விருது வாங்கியிருக்கும் பதினைந்து வயது குற்றாலீஸ்வரனிடம்

# பதினைந்து கேள்விகள்

**1. குற்றாலீஸ்வரன் என்று ஏன் பெயர் வைத்தார்கள்?**

எனது தாத்தா குற்றாலத்தில் வேண்டி வைத்த பெயர்.

**2. நீச்சல் கற்றுக் கொண்டபோது என்ன வயது?**

ஏழு வயதில் நீந்தக் கற்றுக் கொண்டேன்.

* 3 வயதில்....



**3. படிப்பில் நீங்கள் எப்படி?**

நன்றாகப் படிப்பேன்.

**4. பிடித்த விளையாட்டுகள்?**

கிரிக்கெட், பாஸ்கட் பால்.



## கலைஞர் அருட்செல்வன்

**தி**ராவிட இயக்கத் தலைவர்கள் தமிழ்ப்பற்று காரணமாய் தமது பெயர்களை மாற்றிக் கொண்ட கால கட்டம் அது. பேராசிரியர் ராமையா, அன்பழகன் ஆனார்; நாராயணசாமி, நெடுஞ்செழியன் ஆனார். சோம சுந்தரம், மதிஅழகன் ஆனார். இதே போல, கருணாநிதியும் தம் பெயரை அருட்செல்வன் ஆக்கிக் கொண்டார்.

ஆனால் அறிஞர் அண்ணா, "மக்களிடையே உனது கருணாநிதி என்ற பெயரே பிரபலமாய் உள்ளது. உன் பெயரை மாற்றிக் கொண்டால், மக்கள் வீணாக குழம்பிப் போவார்கள். எனவே பெயரை மாற்றிக் கொள்ளாதே!" என்று சொன்னார்.

"அதனால்தான் அருட் செல்வன் என்ற பெயரை மறுபடி கருணாநிதி என்றே மாற்றிக் கொண்டு விட்டேன்"- இந்தத் தகவலை கலைஞரே, அண்மையில் ஒரு விழாவில் தெரிவித்தார்!

– மௌலி

**5. பிடித்த ஸ்போர்ட்ஸ் பர்சனாலிடி?**

டெண்டுல்கர், மார்டினா ஹின்ஜிஸ்.

**6. கடவுள் உங்கள் முன் தோன்றினால் என்ன கேட்பீர்கள்?**

இந்தியாவை எல்லாதுறைகளிலும் வல்லரசு ஆக்க வேண்டும் என்று கேட்பேன்.

**7. சைவமா? அசைவமா?**

அசைவம். சிக்கன் பிடிக்கும்.

**8. உங்கள் செண்டிமெண்ட்?**

போட்டி ஆரம்பிக்கும் முன் கடலைத் தொட்டுக் கும்பிடுவது. சூரிய நமஸ்காரம் செய்வது.

**9. வாழ்க்கையில் மறக்கமுடியாத நாள்?**

1997 ஆகஸ்டு 15. இந்திய சுதந்தரப் பொன்விழா தினம் அன்று எனக்கு அர்ஜுனா அவார்டு கிடைத்த தகவல் வந்ததால்.

**10. யாரைப் பிடிக்கும்? கமல் – ரஜினி?**

ரஜினி.

**11 முணுமுணுக்கும் சினிமா பாட்டு?**

பல பாடல்கள்.

**12. நீங்கள் சந்திக்க விரும்பும் ஒரு பிரமுகர்?**

அப்துல்கலாம்- இந்திய விஞ்ஞானி

**13. பொழுதுபோக்கு?**

கிரிக்கெட் விளையாடுவது, பாட்டுக் கேட்பது.

**14 ஒரு படம் வரையுங்களேன்?**



**15. உங்களை சிலிர்க்க வைக்கும் இதிகாசக் கதாபாத்திரம் எது?**

அர்ஜுனன். அவருடைய கான்ஸன்ட்ரேஷன் பவர் சிலிர்ப்பூட்டுவது.

—குற்றாலீஸ்வரன்

---



"என்னது, உன் வீட்டுக்காரர் எடுத்ததுக்கெல்லாம் கோபப்படுறாரா?"

"ஆமாண்டி. நேற்று அவர் சட்டைப் பையிலிருந்து ஐந்நூறு ரூபாதான் எடுத்தேன்!"

– நெல்லை எம். தங்கவேலு

# "யார் அந்த பாரத்பாலா?"



## — சென்ற வார டீவி விமர்சனத்தில் 'டிஷ்' கேட்டிருந்தார். இதோ விவரங்கள்!

கடந்த பத்தாண்டுகளாக வியாபாரத் துண்டுப் படங்களைத் தயாரிப்பதில் ஈடுபட்டு வருபவர் பாரத்பாலா. இந்த 33 வயது இளைஞருக்கு இந்திய சுதந்தரப் பொன் விழாவின்போது புதிதாக ஏதாவது செய்ய வேண்டுமென்ற யோசனை எழுந்தது. ஆனால் எப்படி? காமராஜரின் மிக நெருங்கிய நண்பரும், விடுதலைப் போராட்ட வீரருமான இவரது தந்தை வி. கணபதி சொன்னாராம். "எங்களுடைய இளமையை தேச சுதந்தரத்திற்காக அர்ப்பணித்து விட்டோம். நீயும் இப்போது ஈடுபட்டுள்ள துறையின் மூலம் எங்களுக்கும் தற்போதைய தலைமுறையினருக்குமிடையே உள்ள இடைவெளியை இணைப்பதோடு வருங்கால சந்ததியினருக்கும் புரியும்படி ஒரு 'கருத்தை' வெளிப்படுத்தலாமே?"

தந்தை சொன்ன கருத்தின் அடிப்படையில்தான் உருவானது 'வந்தே மாதரம்'. இந்த சொல்தானே அன்றைய இந்தியாவில் எல்லா வகுப்பினரையும் ஒன்றுசேர்த்தது? அதே வார்த்தையைக் கொண்டு இன்றைய சமூகத்தினரிடையேயும் ஒற்றுமையை ஏற்படுத்தலாமே என்ற எண்ணம் பாலாவின் மனத்தில் தோன்றியது.

ஒரே ஒரு நிமிடம் ஓடக்கூடிய வகையில் 250 துண்டுப் படங்களை வெவ்வேறு மொழிகளில் எடுத்து முடித்ததோடு தூர்தர்ஷன் உள்பட எல்லா தனியார் சானல்களிலும் ஒளிபரப்ப ஏற்பாடும் செய்து விட்டார். இவருக்கு உறுதுணையாக இவரது மனைவி கனிகாவும், இசையமைத்துத் தர ஏ.ஆர். ரகுமானும் (இவர் பாலாவின் பால்ய நண்பராம்) உதவிக்கரம் நீட்ட, எதிர்பார்த்தபடி பெரும் வெற்றியை ஏற்படுத்தித் தந்திருக்கிறது.

இந்தியர்கள் மட்டுமின்றி - சி.என்.என். இண்டர்நேஷனலைச் சேர்ந்த ரிஸ்கான் என்பவர் மூலம் சமாதானத்திற்காக நோபல் பரிசு பெற்று இன்று நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கும் சைமன் பெரஸ், யாசர் அராஃபத், மதர் தெரசா, ஆர்ச்பிஷப் டெஸ்மாண்ட் டுடு, தலாய் லாமா போன்றவர்களிடமிருந்தும் பேட்டி கண்டு இந்தத் துண்டுப் படங்களைத் தயாரித்திருக்கிறார் பாலா. இவர்களுடன் தொடர்பு கொண்டபோது, மகாத்மாவையும் அவரது அஹிம்சையையும் மதிக்கின்ற காரணத்தால் இந்தியா மீது நாங்கள் கொண்டுள்ள பெருமதிப்பு காரணமாக எந்தவகையிலும் ஒத்துழைப்பு தரத் தயாராக இருக்கிறோம் என்று உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னார்களாம். "இதன் மூலம் வருங்கால சந்ததியினரிடம் உத்வேகம் கிளம்புமாயின் நான் ஒரு இந்தியன் என்பதில் மிகவும் பெருமைப்படுகிறேன்" என்று சொல்கிறார் பாலா.

இந்தத் துண்டுப் படங்களைத் தவிர தேசியக் கொடியின் மூன்று வண்ணங்களுக்கேற்ப ஏ.ஆர். ரகுமான் இசையமைப்பில் பாடல் ஆல்பமொன்றையும் வெளியிட ஏற்பாடுகள் நடந்து வருகின்றன!

"இது வெறும் ஆரம்பம்தான். எங்களுடைய குழு புதிய இந்தியாவையும் புதிய எழுச்சியையும் உருவாக்குவதில் மிகவும் பெருமைப்படுகிறது. நம்முடைய தேசிய கொடிக்குரிய பழம்பெருமையையும் கௌரவத்தையும் மீண்டும் கொண்டு வருவோம்" என்று உற்சாகத்துடன் சொல்கிறார் பாலா.

— அ. குமார்

நன்றி : தி ஏஷியன் ஏஜ்

**பாரதிய ஜனதா கட்சியைச் சார்ந்த சுபாஷ், வழக்கறிஞர் அஜிதா இருவருக்குமிடையே நடைபெற்ற கருத்து மோதலிலிருந்து:**

**அஜிதா** : ஒவ்வொரு வருஷமும், ஐயோ! விநாயகர் சதுர்த்தி வருகிறதே! இந்த வருட விநாயகர் ஊர்வலம் எந்தவிதமான கலவரமும் இல்லாமல் அமைதியாக நடக்க வேண்டுமே என்ற அச்சம் பொது மக்கள் மத்தியில் ஏற்படும்படியான சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. ஒரு வீட்டுப் பண்டிகையை, அரசியல் நோக்கத்துடன் எதற்கு வீதிக்குக் கொண்டு வர வேண்டும்? இதில் எனக்கு சிறிதும் உடன்பாடு இல்லை. ஒருவருடைய சுதந்தரம், அடுத்த மதத்தினருக்கு, பொதுமக்களுக்கு உரிய சுதந்தரத்தில் மூக்கை நுழைக்காமல் இருக்க வேண்டாமா?

**சுபாஷ்** : வீட்டுப் பண்டிகை, ஏன் வீதிக்கு வரவேண்டும் என்ற கேள்வியே சரியல்ல. இந்துக்களைப் பொறுத்தவரை பண்டிகைகள் அனைத்துமே பொதுவான விழாக்கள்தாம். நம் கோவில்களில் ஆண்டு முழுக்க எத்தனை உற்சவங்கள், விழாக்கள் நடைபெறுகின்றன. அப்போதெல்லாம் அசம்பாவிதங்கள் நடந்து கொண்டிருப்பதில்லையே! ஜெயலலிதாவும், சசிகலாவும், மகாமகத்தின்போது கும்பகோணம் வந்திருந்தார்கள். நெரிசலில் மிதிபட்டுப் பலர் இறந்தார்கள். அதற்காக இனி கும்பகோணத்தில் மகாமகத்துக்குத் தடை விதித்துவிடலாமா என்ன?

# விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் : தடை செய்ய வேண்டுமா? கூடாதா?



**அஜிதா** : ஏற்கெனவே, தென் மாவட்டங்களில் ஜாதிக் கலவரங்கள். இந்தச் சூழ்நிலையில், ஏதோ ஒரு சிலர், குறுகிய நோக்கங்களுக்காக நடத்த முயலும் விநாயகர் ஊர்வலத்தை நடத்தாமல் இருக்கக் கூடாதா?

**சுபாஷ்** : ஜாதிக் கலவரங்கள் பற்றி நீங்களே சொல்கிறீர்கள். பிளவு பட்டுக்கிடக்கிற மக்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டாமா? ஜாதியால் பிளவுபட்டுள்ள மக்களை, ஒன்றுபடுத்தும் வலைதான் மதம். அந்த அடிப்படையில் ஜாதி, பொருளாதார நிலை என்று எல்லாவித வித்தியாசங்களையும் மறந்து, 'நாம் அனைவரும் இந்துக்கள்' என்ற உணர்வை ஏற்படுத்துவதன் மூலம் ஒற்றுமையை நிலைநாட்ட முடியுமல்லவா?

**அஜிதா** : நாம் வித்தியாசங்களை மறந்து ஒன்றுபட வேண்டும் என்பதை விட, மெஜாரிடி மக்கள் ஒன்றுபட்டால், மைனாரிடி மக்களை என்ன வேண்டுமானாலும் செய்து விட முடியும். எனவே, ஜாக்கிரதை என்று எச்சரிக்கிறாற் போலத்தானே இருக்கிறது இந்த ஊர்வலத் திட்டமெல்லாம்?

**சுபாஷ்** : விநாயகர் சதுர்த்தி விழாவுக்கு சரித்திரப் பின்னணி இருப்பது உங்களுக்கே

தெரியும். வெள்ளைக்காரர்களை எதிர்த்து, தேசிய உணர்வை, இந்திய மக்களுக்கு ஊட்டி, ஒன்று படுத்திட திலகர் துவக்கிவைத்ததுதான் இது. அத்தகைய ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த விநாயகர் சதுர்த்தி ஊர்வலத்தை இந்த சுதந்தரப் பொன்விழா ஆண்டில் தடை செய்ய வேண்டும் என்று கூறுவது, பாரதத் தாய்க்கே அவமரியாதை!

**அஜிதா :** திலகர் நடத்தியது மும்பையில். ஆனால், தமிழ்நாட்டுக்கு, குறிப்பாக சென்னைக்கு அது புதிது. ஜாதியால் பிளவு பட்டுள்ள சமூகத்தை, மதத்தால் ஒன்று சேர்ப்போம் என்பது வெறும் வார்த்தை ஜாலம்தான்.

**சுபாஷ் :** விநாயகர் ஊர்வலத்






தில் குப்பன் சுப்பன் வீட்டு சிறு பிள்ளையார்களும், பணக்காரர்கள் வீட்டு பிள்ளையார்களும் அரையடி மண் பிள்ளையாரும், 32 அடி வீர விநாயகரும் இடம் பெறும்போது, பலதரப்பினரும் வேற்றுமைகள் பாராது, ஊர்வலத்தில் பங்கேற்பது ஊர்கூடித் தேர் இழுக்கிற பழம் பெரும் பாரம்பரியத்தைத்தான் காட்டுகிறது.

**அஜிதா :** இந்த விழாவை ஏற்பாடு செய்வது, பெருமளவில் கூட்டம் சேர்ப்பது எல்லாம் ஒரு சில குறிப்பிட்ட அரசியல் கட்சி சார்ந்த அமைப்புகளின் ஏற்பாடு. இந்தக் கூட்டம், தானாக வருகிற கூட்டமில்லை; கூட்டப்படுகிற கூட்டம். ஊர்வலத்தின்போது, திட்டமிட்டு வன்முறை நடத்தப்படுகிறது: பொதுச் சொத்துக்கள் நாசமாக்கப்படுகின்றன; மசூதிகள் அவமதிப்புக்குள்ளாகின்றன.

**சுபாஷ் :** போலீஸ் பந்தோபஸ்து என்று ஒன்று எதற்காக? வன்முறையை வேடிக்கை பார்க்கவா?

**அஜிதா :** தனிமனிதன் கோழையாய் இருந்தாலும், கூட்டத்தில் அவனுக்கு வீரம் வருகிறது. அதுதான் மாஸ் சைக்காலஜி.

**சுபாஷ் :** நம் போலீசுக்கு தெரு முழுக்க, நாலு அடிக்கு ஒருவர் என்று மரம் போல நிற்கத்தான் தெரியும். கும்பலை, விஞ்ஞான பூர்வமாய் கட்டுப்படுத்தும் முறைகள் தெரியாது. ஊர்வலங்களின்போது, வன்முறை நிகழ்வதும், பொதுச் சொத்துக்கள் நாசமடைவதும் கண்டிக்கத்தக்கவைதான், துரதிருஷ்டவசமானதுதான். ஆனால், இந்த ஜனநாயக நாட்டில், அரசியல் கட்சிகள், ஜாதி சங்கங்கள் இவையெல்லாம் பேரணி நடத்தலாம்.



''என்னது! உன் வீட்டுக்காரர் இன்னிக்கு இரண்டாயிரமாவது முறையா மேடை ஏறிப் பேசப் போறாரா!''

''ஆமா, மைக் டெஸ்டிங்! மைக் டெஸ்டிங்! ஒன், டூ... சொல்லப் போறார்!''

— நெல்லை எம். தங்கவேலு



''போலிச் சாமியார்களைப் பற்றி உங்கள் கருத்து என்ன சாமி?''

''என்னத்தைச் சொல்ல? போட்டி அதிகமாயிடுச்சு!''

— யமுனா பார்வதி

பொதுமக்களை சங்கடப்படுத் தலாம். ஆனால், ஆண்டுக்கு ஒரே ஒருநாள் விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் மட்டும் நடத்தக் கூடாதா? இது என்ன நியாயம்?

**அஜிதா** : ஊர்வலத்தை அமைதியாய் நடத்துங்கள். பிறமதத்தவரின் மனம் புண்படும்படியான கோஷங்களை எழுப்பியபடி ஏன் போக வேண்டும்?

**சுபாஷ்** : தவறு. ஊர்வலத்தின்போது என்னென்ன கோஷங்கள் எழுப்பப்பட வேண்டும் என்று வரையறுத்து, பொதுமக்களுக்கு விநியோகிக்கப்படுகிறது. இது குறித்து வந்த பத்திரிகை செய்திகளை என்னால் ஆதாரம் காட்ட முடியும்.

**அஜிதா** : இன்ன ரூட் வழியாகத்தான் ஊர்வலம் போவோம் என்று அடாவடித்தனம் பண்ணலாமா?

**சுபாஷ்** : சுவாமி ஊர்வலம் என்பது இந்துக்களிடையே பலநூற்றாண்டுகளாய் கடைபிடிக்கப்படுகிற ஒரு மரபு. திருவிழாக்காலங்களில், உற்சவமூர்த்தியை, மாடவீதிகளிலும், பிற முக்கிய தெருக்களிலும் ஊர்வலமாய் எடுத்துச் செல்வது தானே நம் மரபு? ஏதோ ஒரே ஒரு வருடம், ஊர்வலம் நடந்தபோது, அதுவும் மொத்த ஊர்வலரும், குறிப்பிட்ட அந்தப் பகுதியைக் கடந்த பிறகு, வன்முறை நிகழ்ந்ததை, மனத்தில் வைத்துக் கொண்டு விநாயகர் ஊர்வலத்தைத் தடை செய்ய வேண்டும் என்று வாதிடுவது சரியல்ல.

**அஜிதா** : என் வாதம் இத்தகைய ஊர்வலங்களில் மதவெறிதான் ஊட்டப்படுகிறது. மதவெறி மூலம்தான் மக்களை ஒன்றுபடுத்த முடியுமா? ஏன்... ரேஷன் பிரச்னை இருக்கிறது. இது எல்லோரையும் பாதிக்கிறது. அதனைத் தீர்க்க என்ன வழி? அதற்காக மக்களை ஒன்று சேருங்களேன். மதபாகுபாடுகளைக் கடந்து, மக்கள் திரண்டு வருவார்களே!

**சுபாஷ்** : ஒரு சில அமைப்புகளைச் சேர்ந்தவர்கள் மட்டுமே இதனை ஏற்பாடு செய்கிறார்கள் என்பது உங்கள் கருத்து. ஆனால் கட்சிப் பாகுபாடு இன்றி, மக்கள் இந்த ஊர்வலத்தில் திரண்டு வருகிறார்களே! அது மட்டுமில்லை. இந்த ஒரு வாரகால திருவிழாவின் போது, இன்று உள்ள இளைய தலைமுறையினருக்கு, நம் பாரத நாட்டின் பண்பாடு, கலாசாரத்தைக் கற்பிக்கும் விதமாய் ஆன்மீக சொற்பொழிவு, பாட்டு, பேச்சு போட்டிகள், க்விஸ், மாறு வேடப் போட்டி என்று நடத்தி வருகிறார்களே! அதையெல்லாம் ஏன் மறந்து விட்டீர்கள்? ஒன்று சொல்கிறேன். ஊர்வலம் கூடாது எனத் தடைபோடுவதைவிட தக்க பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது தான் அரசின் கடமை. அரசாங்கத்துக்கு மூன்றாவது கண்ணாய் இருக்க வேண்டியது உளவுத்துறை. அது விழிப்புடன் இருக்க வேண்டும். இது போன்ற சமயங்களில் அதன் பணி ரொம்ப முக்கியம். ஆனால், உளவுத் துறையை ஆளுங் கட்சிக்கு, பர்சனலான விஷயங்களை சேகரித்துத் தரும் அமைப்பாக பயன்படுத்தப்படுவது துரதிருஷ்டமானது. உளவுத்துறை விழிப்புடன் இருந்தால், எந்தவிதமான அசம்பாவிதங்களையும் முன்னெச்சரிக்கை நடவடிக்கை மூலம் தடுத்துவிடலாம்.

ஏற்பாடு, தொகுப்பு : **மௌலி**

படம் : **யோகா**

• சிபிலியஸ் நினைவுச் சின்னம்

# கண்ணாடிக்குள் ஒரு நகரம்!

**ஜூலை 28 முதல் ஆகஸ்டு 3 வரை ஃபின்லாந்தில் 'டான்ஸ் அண்ட் சைல்ட்' (Dance & child) என்ற தலைப்பில் ஒரு சர்வதேச கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் இந்தியாவிலிருந்து அழைக்கப்பட்டிருந்த ஒரே பிரதிநிதி வி.ஆர். தேவிகா. பிரபல நடன விமர்சகர். பின்லாந்தில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைச் சொன்னார் தேவிகா :**

"குழந்தைகளின் வளர்ச்சியில் நடனம் பெரும் பங்கு வகிப்பதை வலியுறுத்தும் முக்கிய நோக்கத்துடன் தொடங்கப்பட்ட 'டான்ஸ் அண்ட் சைல்ட் இன்டர்நேஷனல்' என்ற அமைப்பு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை இத்தகைய கருத்தரங்கை ஏதாவது ஒரு நாட்டில் நடத்துகிறது. இந்த ஆண்டு ஃபின்லாந்தில் 'கோப்பியோ' என்ற நகரில் நடந்தது. நானூறு பேர் கலந்து கொண்டனர். என்னை 'கீ நோட் பேனலில்' சேர்த்திருந்தது பெருமையாக இருந்தது.

முதலில் ஃபிரான்ஸ் போனேன். அங்கே பாரீஸில் என் நெருங்கிய



• தேவிகா

தோழி நிருபமா - நித்யானந்தன் இருக்கிறாள். பிரான்ஸ் நாட்டின் செவாலியே விருது பெற்ற இளம்பெண். (சிவாஜிக்குக் கொடுத்த அதே செவாலியே விருது) அற்புதமான நாடக அரங்க நடிகை. (தியேட்டர் குரூப்) அவளைப் பார்க்கப் போனேன். அவளுடன் கவிதை ஹோட்டல் ஒன்றுக்குப் போயிருந்தேன். கவிதை ஹோட்டல் என்றால் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா!

ஜே. பி. ராஸ்னே என்கிற கவிஞர் நடத்துகிறார். இங்கே கவிதையில் ஆர்வம் இருக்கிறவர்கள் தினமும் கூடுகிறார்கள். டின்னர் முடிந்தவுடன் விளக்குகள் மங்கலாக்கப்படுகின்றன. ஒவ்வொருவரும் தாம் விரும்பிப் படித்த, ரசித்த கவிதைகளை அங்கே படித்துக் காட்டலாம். தானே எழுதியிருந்தாலும் அதை அரங்கேற்றலாம். இவை பிரெஞ்ச் மொழியில்தான் பெரும்பாலும். வெளிநாட்டுக் கவிஞர்களின் படைப்புகள் பிரெஞ்ச் மொழியில் பெயர்க்கப்பட்டு அவையும் இடம்பெறுகின்றன. கவிதைகள் ராஸ்னேக்குப் பிடித்திருந்தால் அவற்றைப் புத்தகமாக வெளியிடவும் முன்வருகிறார். இந்தியாவிலிருந்து ஒரே ஒரு கவிஞரின் - அவர் கவிதைகளின் பிரெஞ்சு மொழிபெயர்ப்பு மட்டுமே அங்கே இருந்தது. அவர் - மகாகவி பாரதியார்! மகிழ்ந்து போனேன்!

ராஸ்னேயின் மனைவி, மகன் அனைவரும் கவிஞர்களே. பகல் முழுவதும் சமையலறையில் புகுந்து சமைக்கிறார்கள். கஸ்டமர்களுக்குப் பரிமாறுகிறார்கள். இரவில் கவிதை. இதுபோன்ற ஹோட்டலை நான் இதுவரை பார்த்ததில்லை.

● Tea and Tattered pages என்று இன்னொரு ஹோட்டல். அது வேறு மாதிரி. காப்பிக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு புத்தக அலமாரி பக்கம் போக வேண்டியது. எல்லாம் பழைய புத்தகங்கள். எடுக்கலாம், படிக்கலாம். வீட்டில் பழைய புத்தகம் இருந்தால் அதைக் கொண்டு வந்து இங்கே வைத்துவிட்டு இங்கேயிருந்து ஒரு பழைய புத்தகத்தைப் பண்டமாற்று போல புத்தக மாற்றாக கொண்டு போகலாம். பழைய நூல்கள் விற்பனைக்கும் கிடைக்கிறது.


• புடவை கட்ட ஆர்வம்...

● ஃபின்லாந்தின் தலைநகரம் ஹெல்ஸின்கி. விமானம் நெருங்கும் போது கீழே பார்த்தால் பெரிய கண்ணாடிக்குள் நகரம் மின்னுவது போல இருக்கிறது. அவ்வளவு ஏரிகள். கடலுக்கு நூறு மீட்டர் தொலைவில் நம்ப முடியாதபடி சுத்த நீர் ஏரிகள். அங்கேயே அள்ளி அள்ளிக் குடிக்கலாம். அவ்வளவு தூய்மையான நீர்.

● மார்க்கெட் பக்கம் போயிருந்தேன். என் சேலை கட்டிய கோலத்தைப் பார்த்து ஒருவர் என்னிடம் வந்தார்.

'இந்தியாவா?'

'ஆம்' என்றேன்.

தயங்கியபடியே, 'லண்டனுக்குப் போயிருந்தபோது என் மனைவிக்கு ஒரு புடைவை வாங்கி வந்தேன். ஆனால் அதை என்ன பண்ணுவது, எப்படிக்கட்டுவது என்று அவளுக்குத் தெரியவில்லை. ஹெல்ப் பண்ண முடியுமா?' என்று கேட்டார்.

"ஹோட்டல் ரூமுக்கு அழைத்து வாருங்கள். சொல்லிக் கொடுக்கிறேன்."

அந்த அம்மாளுக்கு ஒரே குஷி. புடைவை கட்டிக் கொண்டு, இரண்டு மூன்று தரம் அவிழ்த்து திரும்பவும் கட்டி எக்ஸ்பர்ட் ஆகிவிட்டார். அவரது கணவர் அந்த ஊர் கவுன்சிலர் என்று அப்புறம்தான் தெரிந்தது!

● சிபிலியஸ் நினைவுச் சின்னத்துக்குப் போயிருந்தேன். சிபிலியஸ் என்பவர் அந்நாட்டு மாபெரும் இசை மேதை. அவரது நினைவுச் சின்னம் வெறும் குழாய்களால் அமைக்கப்பட்டிருந்தது.



• ஏரா ஹமினியேமி

அதுவும் கடற்கரையோரம். காற்று அந்தக் குழாய்களின் வழியே பரவும் போது இதமான இசை உருவாகிறது. கீழே நின்றால் உடலும் உள்ளமும் பரவசமாகி விடுகிறது. வித்தியாசமான நினைவுச் சின்னம். மறக்கவே முடியாது!

அங்கே ஏரா ஹமினியேமி என்ற மேதையைச் சந்தித்தேன். இந்திய இசையின் மீது அவருக்கு அளவு கடந்த மோகம். மேற்கத்திய இசையோடு கர்நாடக இசை அம்சங்களை இணைத்து அவர் உருவாக்கி வரும் புதிய இசை பெரும் புகழ்பெற்று வருகிறது.

நான் ஏற்கெனவே அவரைச் சென்னையில் சந்தித்து இருக்கிறேன். 1990லிருந்து ஒவ்வொரு டிசம்பர் மாதமும் இசை விழாவுக்குச் சென்னைக்கு வருகிறார். நான் கிளம்பும் முன்பு பேக்ஸ் அனுப்பி, 'இங்கிருந்து என்ன கொண்டு வர வேண்டும் உங்களுக்கு' என்று கேட்டிருந்தேன்.

'இரண்டாம் கிளாஸ், மூன்றாம் கிளாஸ் தமிழ்ப் புத்தகங்கள் கொண்டு வா. தமிழ் கற்றுக் கொள்ள வேண்டும்' என்று பதில் அனுப்பினர்.

அவற்றோடு நான் சில வீடியோ கேசட்டுகளையும் கொண்டு போயிருந்தேன்.

மனிதர் நான் அங்கிருந்த பத்து நாட்களில் தன் பெயரைத் தமிழில் எழுதும் அளவுக்கு வந்து விட்டார். அந்த மேதையின் உழைப்பு என்னை அசரவைத்து விட்டது!

**வி.** ஆர். தேவிகா அந்த கருத்தரங்கில் சமர்ப்பித்த ஆய்வுக் கட்டுரை 'நடனம் - ஒரு கலாசாரப் பாலம்' என்ற தலைப்பில்.

கிராமியக் கலைஞர்களை - தப்பாட்டம் தேவராட்டம் போன்ற பழம்பெரும் கலைகளில் தேர்ந்தவர்களை சென்னைக்கு வரவழைத்து பத்து நாட்கள் தங்கவைத்து அவர்களின் கலைத் திறமையை நகரத்துக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுவதும், நகர பரதநாட்டியக் கலைஞர்களை கிராமங்களில் கொண்டு போவதும் தேவிகா ஈடுபட்டுள்ள விருப்பச் செயல். இதற்கு ஃபோர்டு அறக்கட்டளை நிதியுதவி செய்கிறது. இந்த நிகழ்ச்சிகளின் வீடியோக்களைக் கொண்டு போய் ஃபின்லாந்தில் போட்டுக் காட்டி அனைவரின் பாராட்டுகளையும் பெற்றுத் திரும்பியிருந்தார் தேவிகா.

சந்திப்பு : **ராணிமைந்தன்**

"இதற்கெதிராக சட்டம் இயற்றினால் கூடப் பரவாயில்லை!" என்று பொரிந்தார் டாக்டர் மாதங்கி ராமகிருஷ்ணன் - சென்னை சைல்ட் ட்ரஸ்ட் மருத்துவமனையின் தீக்காய சிகிச்சைப் பிரிவின் தலைவி. அவர் குறிப்பிட்டது தீமிதியில் குழந்தைகளை நேரடியாகவோ மறைமுகமாகவோ ஈடுபடுத்துவதை.

ஆடி மாதம் வந்தால் போதும்.

கொண்டு சிகிச்சைக்காக இந்த மருத்துவமனைக்கு வந்திருக்கிறார். அவர் செய்தது இதுதான். ஒரு கையில் ஆறு வயது விக்னேஷையும், மற்றொரு கையில் நான்கு வயது விஜய குமாரையும் தூக்கிக் கொண்டு பல்லாவரம் பகுதியில் உள்ள ஓர் அம்மன் கோவில் விழாவில் தீயின் மீது நடந்திருக்கிறார். பாதி வழியில் கால்தடுக்கி விழுந்திருக்கிறார். விழும் போது இவர் தீக்கு வெளிப்புறமாக விழுந்து விட, குழந்தைகள் நெருப்பில் விழுந்து

# தீமிதியில் குழந்தைகள்:

• தீக்காயத்துக்கு சிகிச்சை...



# தீராத பிரச்னைகள்!

அம்மனுக்கு தீமிதி என்று நடக்கும் வைபவங்களில் ஆழ்ந்த தீக்காயங்களைப் பட்டுக் கொண்டு வரும் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறதாம். "இப்படி மாதத்தில் பத்து கேஸ்களையாவது கவனிக்க வேண்டியிருக்கிறது" என்றார்.

சமீபத்தில் கூட பம்மலைச் சேர்ந்த ஸ்ரீனிவாசன் என்பவர் தன் இரு மகன்களையும் தூக்கிக்



• டாக்டர் மாதங்கி

விட்டனர்! கடும் தீக்காயங்கள். தீவிர சிகிச்சைக்குப் பிறகு கடுமை குறைந்திருக்கிறது என்றாலும் முழுவதும் சரியாக நாளாகும்.

"கீழ்ப்பாக்கம் அரசு மருத்துவமனையில் பணியாற்றியபோது இன்னும் இதுபோன்ற அதிகமான கேஸ்களைக் கையாளும்படி நேர்ந்திருக்கிறது. தீவிர் காயங்களுக்கு தோல் மாற்று அறுவைச் சிகிச்சையெல்லாம்

செய்ய வேண்டியிருக்கிறது. இதெல்லாம் தவிர்க்கப்பட்டிருக்கலாமே என்று கோபமும் வருத்தமும் ஏற்படுகிறது" என்கிறார் மாதங்கி.

"தொடக்கத்தில் தொழுநோயாளிகள்தாம் இந்தத் தீமிதி வைபவத்தில் அதிகம் கலந்து கொண்டார்கள் என்று நினைக்கிறேன். அவர்களுக்குப் பாதங்களில் உணர்விருக்காது. சிறு தீக்காயங்கள்தாம் ஏற்பட்டிருக்கும். இப்போது பலதரப்பட்டவரும் தீமிதிக்கிறார்கள். ஆபத்தைத் தவிர்க்கும் அல்லது குறைக்கும் விதமாக இவர்கள் தங்கள் பாதத்தில் எந்தவித மருந்தையும் தடவிக் கொண்ட பிறகு தீயில் இறங்குவதில்லை. இவர்களில் பெரும்பாலானவர்கள் ஏழைகளாகவும், தீ விபத்து ஏற்பட்ட தங்கள் குழந்தைக்கு அடிப்படை மருத்துவ வசதி அளிப்பதற்குக் கூட இயலாதவர்களாகவும் இருப்பது இன்னும் வேதனை!'' என்று வருத்தப்பட்டார்.

''ஆன்மீக நெறி முறைகளைக் குழந்தைகளுக்கு எடுத்துச் சொல்லி, நல்லொழுக்கத்தை வளர்ப்பது ஆரோக்கியமான போக்கு. ஆனால் முழு அளவு இறைவனிடம் சரணடைந்து விடாமல் அங்குமிங்கும் ஊசலாடிக் கொண்டிருக்கும் நாம், கொஞ்சமாவது விஞ்ஞானபூர்வமாக சிந்திப்பது நல்லது. குழந்தைக்குக் கடும் தீக்காயம் எனும்போது பெற்றோர் சினிமாவில் காட்டுவது போல் அம்மனின் காலடியிலேயே குழந்தையைப் போட்டு வேண்டிக் கொள்வதில்லையே? மருத்துவரிடம்தானே உடனே விரைகிறார்கள்? இப்படி பக்தியில் பூரண நிலையை அடையாத நாம், நடைமுறை ரிஸ்குகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டாமா?

"அமெரிக்காவில் ஆபத்தான பணிகளிலோ, சூழலுக்கோ குழந்தையை ஈடுபடுத்தினால் அதன் பெற்றோருக்கு சிறை தண்டனை உண்டு! இங்கும் கூட இப்போதுள்ள சட்டத்திலே 'Child Abuse' என்ற பிரிவில் நடவடிக்கை எடுக்கலாம். குழந்தைகளைத் தீமிதி போன்ற செயல்களில் ஈடுபடாமல் நிறுத்துவதற்கான அறிவை அந்தப் பெற்றோர்களுக்குத் தெரியவைப்பது ஆத்திகர்களின் முக்கியக் கடமை" என்கிறார் இவர்.

— ஜி.எஸ்.எஸ்.

# தியாகமா? காட்டுமிராண்டித்தனமா?

சமீபத்தில் சன் டி.வி.க்கு அளித்த பேட்டியில், தீமிதி பற்றிய கேள்விக்கு "அமெரிக்கப் பல்கலைக் கழகமொன்றில் தீமிதியை ஒரு பாடமாகவே வைத்திருக்கிறார்கள்'' என்று டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி கூறியிருந்தார். தற்போதைய சூழலில் இது பற்றி அவரிடம் விளக்கம் கேட்டோம்.

''கொலராடாவைச் சேர்ந்த கல்விக் கூடமொன்றில் மேனேஜ்மெண்ட் படிக்கும் மாணவர்கள் தீமிதிக்கச் செல்கிறார்கள். மன உறுதியை சோதிப்பதற்காக இந்தப் பயிற்சி கொடுக்கிறார்கள். இதே போல் மலையேறச் சொல்வதும் உண்டு. ஆனால் இந்தப் பயிற்சிகளில் ஈடுபடுவது கட்டாயமல்ல. விருப்பமில்லாதவர்களை வற்புறுத்துவதில்லை. இந்தியா மட்டுமல்ல, வேறு பல ஆசிய நாடுகளிலும் தீமிதி பழக்கமுண்டு. எனவே எந்த நாட்டை உதாரணமாகக் கொண்டு அவர்கள் இதைச் செய்கிறார்கள் என்பது திட்டவட்டமாகத் தெரியவில்லை.


• எம்.எஸ். உதயமூர்த்தி

''தீமிதி என்பது நம்பிக்கையைப் பொறுத்த விஷயம். கடவுளை நினைத்தபடியே நெருப்பில் நடக்கும்போது ஒருவன் எந்த உணர்வும் தன்னை பாதிக்காதவனாக இருக்கிறான் என்றால் அப்போது அவன் மூலாதார சக்தியோடு ஒன்றிவிடுவதாகத்தான் பொருள். நாமாக ஒரு கண்ணோட்டத்தை வளர்த்துக் கொண்டு தீமிதியும், அலகு குத்திக் கொள்வதும் அறிவீனம் என்று சொல்லக் கூடாது. வேண்டுதல் – பலித்தல்– நிறைவேற்றுதல்– இந்தச் செயல்கள் கேள்விக்கு அப்பாற்பட்டவை. அரசியல்வாதிகளை விடுங்கள்... 'காட்டு மிராண்டித்தனம்' என்பார்கள். தங்களுக்கு சாதகமாக இருக்கும்போது தீக்குளித்தலைக் கூடத் தியாகமாக்கிவிடுவார்கள்!

''ஆனால் குழந்தைகளைத் தீயில் நடக்கச் செய்வதோ, குழந்தையைத் தூக்கிக் கொண்டு தீயில் நடப்பதோ ரொம்பத் தப்பு. முடிவெடுக்கும் பக்குவம் அவர்களுக்குக் கிடையாது'' என்று தீர்மானமாகவே சொல்கிறார் உதயமூர்த்தி.

சீதா ரவி

"ஜானு..."

கடைசி துளசி தளத்தைத் தொடுத்து முடித்த ஜானகி எழுந்தாள்.

"என்மா...?"

"போய் பங்கஜத்தம்மாட்ட கேட்டு தேங்குழல் அச்சு வாங்கிண்டு வாயேன்... நம்மதுல கன கனமா விழறது. குழலோடாம போய் நன்னாவே வராது..."

"தேங்குழல் இல்லைன்னா என்னம்மா, விடேன்... இத்தனை விதம் பண்ணியிருக்கியே..."

"மனசு கேக்கலைடீ ஜானு... தேங்குழல்னு சொல்றச்சேல்லாம் எனக்கென்னவோ அந்த வேய்ங்குழல் வாய்தான் ஞாபகம் வரது... ஒரு தடவை சோம்நாத்பூர்ல பார்த்த வேணுகோபாலன் விக்கிரகம் - அப்படியே அந்தக் குழல்லேருந்து அலை அலையா சங்கீதம் கிளம்பி வர்றாப்பல தத்ரூபம்... கோகுலாஷ்டமியும் அதுவுமா அவனுக்குக் குறை வைக்க வேண்டாம்..."

ஜானு சிரித்துக் கொண்டாள். துளசி மாலைக்குத் தண்ணீர் தெளித்து ஓலைக் கூடையைக் கவிழ்த்து மூடினாள். முன் நெற்றியை மட்டும் வாரிக் கொண்டு கூடத்தை நிறைத்துக் கிடந்த மாக்கோலம் மிதிபடாமல் நுனிக்காலால் நடந்து வெளியேறினாள்.

தெருவில் ஒரு வீடு விடாமல் சின்னப் பாதங்கள் படியேறிக் கொண்டிருந்தன. அக்கறையுடன் அளவெடுத்து வடித்தது போல் சில, அவசரமாகப் பல, அகட்டி அகட்டி வைத்து அலட்சியமாக வரையப்பட்ட வேறு சில...

ஸ்ரீமதி மாமி காவியிட்டுக் கொண்டிருந்தாள். மணக் கோலத்தின் ஓரத்தை சிங்காரித்த தாமரை மொட்டுகளைச் சுற்றி ஒரே அகலத்துக்கு அரக்குப் பட்டை. ஜானகி ஒரு நிமிடம் நின்று அதைப் பார்த்தாள்.

"ரொம்ப அழகாயிருக்கு மாமி..."

சிவந்த விரல்களுடன் நிமிர்ந்த மாமிக்கு சந்தோஷம். "அடுத்த வருஷம் உங்காத்துல ஒரு கிருஷ்ணன் பிறக்கணும்டீ... பிறப்பான்...! இந்த ஸ்ரீமதி சொல்றேன் - இன்னைக்கு நீ மஞ்சத் துணியில காசு முடிஞ்சு வை... நடக்கறதா இல்லியா பாரு..."

ஏதும் பேசாது சிரித்துக் கொண்டே வேகமாகப் போய் விட்டாள் ஜானகி.

"ஏன்டீ பொண்ணே சிரிக்கறே? நான் நிஜமாத்தான் சொல்றேன்..."

ஸ்ரீமதி மாமியின் குரல் துரத்திக் கொண்டு பின்னால் வந்தது.

தான் சொல்லும் நிஜத்தை மட்டும் ஏற்பாரில்லை.... அம்மா கூட பிரார்த்தனைகளால் தன்னையே ஏமாற்றிக் கொள்ள முயல்கிறாள்.

'Both fallopian tubes blocked fully' - மருத்துவப் பரிசோதனை அறிக்கை தாட்சண்யமின்றி நிஜம் சொல்கிறது. அதையும் பொய்யாக்க எத்தனை முயற்சிகள்! அம்மாவும் அப்பாவும் 'வேளை வரும்' என்று பூஜாபலனில் அசையாத நம்பிக்கையுடன் இருக்கிறார்கள் என்றால், ராமகிருஷ்ணன் இயற்கையை செயற்கையாய் ஜெயித்துவிடும் உறுதியில் இருக்கிறான். டாக்டர் கல்யாணி காமேஸ்வரனுக்கோ இது ஒரு அறிவார்த்தமான சவால்.

"ஜானகி! எப்படியும் ஆறு மாசத்துக்குள்ள உங்களை கர்ப்பமடையச் செய்துடுவோம்... கவலையேபடாதீங்க..."

"ஜானுவுக்குத்தான் இது எதுவும் பிடிக்கவில்லை. கேட்கவே அருவருப்பாக இருந்தது.

ராமகிருஷ்ணன் பரபரத்தான். எப்படியாவது ஒரு குழந்தை வேண்டும். அதை ஜானு பெற்றுத்தர வேண்டும். தங்கள் வம்ச விருத்தி வல்லமையை உலகுக்கு நிரூபித்தாக வேண்டும். ஏன் தங்களுக்கே நிரூபித்தாக வேண்டாமோ...?

'வேண்டாம்!' என்பது ஜானுவின் அழுத்தமான வாதம்.

அவன் சொல் அம்பலமேறவில்லை.

பங்கஜத்தம்மாள் உத்ஸவ விக்கிரகம் போல் நகையணிந்து, அவலை முறத்தில் போட்டு நோம்பிக் கொண்டிருந்தாள்.

ஜானுவும் கூட கோகுலாஷ்டமிக்காக விசேஷமாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டுதானிருந்தாள். கண்ணன் அவளுக்கும் இஷ்ட தெய்வம் தான். வாத்ஸல்யம், பிரேமை, பக்தி,



"மகனுக்கு தபால் எழுதறேன்னு சொல்லிட்டு அன்புள்ள அப்பாவுக்குன்னு ஆரம்பிக்கிறீங்களே...?"

"என் மகன் பெயர்தான் அப்பாவு!"

– எஸ். பொன்னுசாமி.

கோபம், வேதாந்தம் என்று சகலத்தையும் அவனுடன் உரிமையோடு பகிர்ந்து கொள்ள முடிந்தது.

ஊர் உலகம்தான் கோகுலாஷ்டமிக்கு வேறொரு அர்த்தம் கற்பிக்க ஆரம்பித்திருந்தது. அந்த குழந்தைக் கடவுள், ஜானுவுக்கு மட்டும் ஓர வஞ்சனை செய்வதை அன்று தவறாமல் கவனமாய்ச் சுட்டிக்காட்டியது. அத்தகைய ஏழு கோகுலாஷ்டமிகளைப் பார்த்து விட்டான் ஜானகி. கண்ணனிடம் மட்டும் அவன் அன்னியோன்னியம் மாறவேயில்லை.

இதோ, இப்போது பங்கஜத்தம்மாள் அவலைப் புடைத்துக் கொண்டே அங்கலாய்க்கும் போது கூட சிரித்தபடி நிற்க முடிகிறது.

"நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதேடீ ஜானு... உங்கம்மாவும் நானும் ஒரே வருஷம் இந்த மங்களபுரி கிராமத்துல வாழ்க்கைப்பட வந்தோம். அக்கா – தங்கை மாதிரி ஒண்ணா இங்கே குடுத்தனம் பண்ணி, புள்ளை பெத்து, தலை நரைச்சு கிடக்கோம். அந்த உரிமைல சொல்றேன்... உங்காம்படையான் சொல்றதைக் கேளு... அந்தபடிக்கு ஆபரேஷன் பண்ணி குழந்தை பெத்துண்டா என்னவாம்...? அதுவும் அவன் குழந்தைதானே...? உன் வயித்துல வளர்ந்து உன் நெஞ்சுல முட்டித்தானே பிறக்கும்...?"

ஜானகி மௌனமாய் சிரித்தாள்.

"ஏண்டீ...? பயமாயிருக்கா...? ஒண்ணும் பயப்படாதே. இந்த நாள்ல ஆபரேஷனும் டாக்டரும் தண்ணி பட்ட பாடு! அதுவும் மெட்ராஸ்லயே குடித்தனம் உங்களுக்கு... சௌகரியத்துக்குக் கேட்க வேணாம்... உனக்குத் தெரியுமோ...? இந்தியாவுல முதல் டெஸ்ட் டியூப் பேபியைப் பெத்துண்டவா சுந்தரபாண்டிபுரம்னு ஒரு கிராமத்து தம்பதி..."

பங்கஜத்தம்மாளின் பொது அறிவு இந்தத் திசையில் மட்டும் ஆழ ஓடியிருந்தது ஜானுவுக்கு வேடிக்கையாயிருந்தது.

"எதுவுமே பேசலைன்னா என்ன அர்த்தம்? இன்னிக்கு ஒங்கிட்டே ஒரு பதில் வராம அந்தத் தேங்குழல் அச்சை நான் தரப் போறதில்லை..."

"பதில் சொல்ல நான் தயார் மாமி... ஆனா யாரும் இதுவரைக்கும் புரிஞ்சுக்கலை..."

"பரவாயில்லை. சொல்லு..."

"கல்யாணம்னு ஒண்ணு எதுக்கு ஏற்படுத்தி வைச்சிருக்கு மாமி...?"

இப்போது மாமிக்கு மௌனம் சாதிக்கும் முறை வந்திருந்தது.

"வம்ச விருத்தி நடக்கணும், சரி... ஆனா அது மட்டும்தானா...? அதுல ஒரு வாழ்க்கை தர்மம் இருக்கு மாமி... நல்லதையும் கெட்டதையும் சேர்ந்து ஏத்துக்கணும் – இரண்டு பேரும் ஏத்துக்கணும். தாம்பத்ய உணர்வுங்கறது இதையெல்லாம் ஒண்ணா சந்திக்கறதுக்கான அன்னியோன்னியத்தை குடுக்க ஏற்பட்டதுன்னுதான் நான் நினைக்கறேன்..."

"அதுல என்னடி சந்தேகம்..."

"ஆனா, அதை ஒதுக்கிட்டு ஏதோ மந்திரத்துல மாங்கா முளைக்கறாப்பலே ஏ.ஸி. ரூம்ல கரு உற்பத்தி பண்ணறதை என்னால ஒத்துக்க முடியலை..."

ஜானகி உறுதியோடு சொன்னபோது பங்கஜத்தம்மாள் ஆச்சர்யத்துடன் பார்த்தாள். 'இப்படியொரு கோணம் இதற்கு இருக்கிறதா?' என்பது போல...

சற்று யோசித்து விட்டுக் கேட்டாள் பங்கஜத்தம்மாள். "ஆனா உலகத்துல எத்தனையோ பேர் இதை ஏத்துண்டு சந்தோஷமா நடத்திக் காட்டியிருக்காளே ஜானு..."

"இருக்கட்டுமே... ஆனா எனக்கு இதைத்தான் பகவான் இயற்கையா விதிச்சிருக்கான்னா அதுக்கு விரோதமா காரியம் செய்ய என்னால முடியாது..."

"பைத்தியம்! அப்படின்னா எத்தனையோ விஷயங்களை விதின்னு தள்ளிட்டு நாம போராடாம இருந்துட வேண்டியதுதான்."

"தப்பு மாமி! நீங்க தப்பா அர்த்தம் பண்ணிக்கறேள். போராடலுக்கும் இயல்புக்கு விரோதமா காரியம் செய்யறதுக்கும் வித்தியாசமிருக்கு..."

பங்கஜத்தம்மாளுக்குக் கோபம் வந்தது. "ரொம்ப மேதாவி மாதிரிதான் பேசறே... உன் ஆம்படையான் மனசைக் கொஞ்சம் நினைச்சுப் பார்த்தியா...?"

"நினைக்காமலில்லை மாமி... அவரும் என் வழிக்கு வருவார்னுதான் போராடிண்டிருக்கேன்... இது விரோதமில்ல மாமி, போராட்டம்..." – உணர்ச்சிவசப்பட்டான் ஜானகி.

ஏதும் பேசாமல் தேங்குழல் அச்சை எடுத்து நீட்டினாள் பங்கஜத்தம்மாள்.



# ஆஸ்துமாவா! ஈஸ்னோபீலியாவா! சைனஸா! காசநோயா!

## இனி கவலையே வேண்டாம்!



### அறிகுறிகள் :

மூக்கில் நீர்வடிதல், சளி, தும்மல், இருமல், கபம், மூக்கடைப்பு, மூச்சுத் திணறல், ஒவ்வாமை, பலஹீனம், உடல் மெலிதல், பசியின்மை, உடல் நடுக்கம், மலச்சிக்கல் போன்றவைகள் இருப்பின் ஆஸ்துமா, ஈஸ்னோபீலியா, காசநோய், சைனஸ் போன்றவைகளாக இருக்கலாம்.

### உணவு :

சாதாரண சைவ உணவு சாப்பிடுவதில் ஆஸ்துமா நோயாளிகளுக்கு எவ்வித கெடுதலும் கிடையாது. இரவு நேர உணவை முடிந்த மட்டும் அரைவயிறு உணவாக உண்பது நலம். அதிக கார வகை உணவுகளையும் தவிர்த்தல் நல்லது. அதிக காரவகை உணவுகளை உண்ணும்போது மலச்சிக்கல் ஏற்பட்டு அதனாலும் ஆஸ்துமா தீவிரமடைய வழிவகுக்கும். அசைவ உணவுகளை குறைப்பது மிகவும் நல்லது. மற்றபடி பச்சை தண்ணீர் நிறைய குடிப்பது மிகவும் சிறந்தது.

### தவிர்க்க வேண்டியவை

டீ, காபி போன்ற பானங்கள், சர்க்கரை உபயோகித்த உணவுப் பொருட்கள், உடலில் குளிர்ச்சி தன்மை ஏற்படுத்தக் கூடிய காய்கறி, பழவகைகள், அடிக்கடி ஆங்கில மாத்திரையின் உபயோகம் முதலானவைகளை அறவே தவிர்த்தல் மிகவும் அவசியமாகும். புகை காற்று படும்படியாக தொழிற்சாலை களில் வேலை பார்ப்பது போன்ற சூழ்நிலைகளையும் தொழிற்சாலை புகை அதிகமிருக்கும் இடங்களில் வசிப்பதையும் முடிந்த மட்டும் தவிர்த்தல் வேண்டும். புகை பிடித்தல், மது அருந்துதல் தவிர்க்கவும்.

### காரணம் :

சிறுநீரகங்களால் பிரித்தனுப்ப முடியாத இத்தகைய அழுக்குகள் அதிகப்படியான நாட்கள் தொடர்ந்து இரத்தத்தில் தங்க நேர்ந்தால் உடலின் வெப்பநிலையில் மாறுதல் ஏற்பட்டு உடல் குளிர்ச்சி தன்மையடையும். இத்தகைய நேரத்தில் இரத்தத்தில் தண்ணீரின் அளவும் அதிகரித்து முகம் வீங்கிக் காணப்படும். தலை, கழுத்து, முகம் போன்ற பாகங்களில் வலி தோன்றக்கூடும். இதனை சைனஸ் என்றழைக்கின்றனர்.

நுரையீரல் தசைப்பகுதிகளுக்கு போதிய சக்தி கிடைக்காததால் அவைகள் சரியான திறனோடு இயங்க முடியாமல் இருக்கும்போதும், நரம்பு மண்டல இயக்கம் சரியாக நுரையீரலின் இயக்கத்தில் ஈடுபடாமலும் இருக்கும் சமயத்தில் மூச்சு வாங்குதல் ஏற்படும். இதனை ஆஸ்துமா என்றழைக்கின்றனர். நரம்பு மண்டல இயக்கத்தில் ஏற்படும் மாற்றத்தினாலோ, சிறுநீரகப் பகுதிகளில் ஏற்படும் கோளாறுகளாலோ, மூச்சுத்திணறல், மூக்கடைப்பு, மூக்கில் நீர் வடிதல், தும்மல், இருமல், கபம், பீனிசம் போன்றவை ஏற்படுகின்றன. இரத்தத்தில் அசுத்தம் ஏற்படும்போது உடலின் எதிர்ப்பு திறன் படிப்படியாக குறைவடையும். உடலில் எதிர்ப்பு சக்தி குறைவடையும் போது நுரையீரல் தசைகளும் வலுவிழந்து காணப்படும். அசுத்தக் காற்று, புகை, தூசி போன்றவைகள் காற்றின் மூலம் நுரையீரலுக்குள் செல்லும் போது மூச்சுத் திணறல், தொடர் தும்மல் ஆகியவை உடனடியாக ஏற்படும். இதையே (Dust Allergy) அலர்ஜி என்கின்றனர்.

### மூலிகை மருத்துவம் :

வேப்பிலை, ஆடாதோடை, அருகம்புல், வில்வம், கீழாநெல்லி, ஓமவல்லி, தூதுவளை, துளசி, தும்பை முதலானவைகளை உலர்த்தி பொடி செய்து சம அளவில் கலந்து வைத்துக் கொள்ளவும். இக்கலவையிலிருந்து 1 டீ ஸ்பூன் பவுடரை 1 டம்ளர் தண்ணீரில் கலந்து காலை உணவுக்கு அரை மணி நேரம் முன்னதாகவும் பின் அதே அளவு கலவை தயார் செய்து மதியம், இரவு உணவுகளுக்கு முன்பாக குடிக்கவும்.

**பயிற்சிகள் :** தினமும் காலையில் மூச்சுப் பயிற்சி செய்தல், தினமும் குறைந்தது ஒரு மணி நேரமாகிலும் சூரிய ஒளியில் இருப்பது, மாலை நேரங்களில் பூங்காக்கள், பயிர்கள் நிறைந்த வயல்வெளிகள் போன்ற இடங்களில் அமர்ந்து ஆக்ஸிஜன் நிறைந்த காற்றினை சுவாசிப்பதும் மூச்சுத்திணறலை குறைக்க வழி வகுக்கும்.

**குறிப்பு :** தற்போது ஆங்கில மாத்திரைகளை உபயோகித்து கொண்டிருக்கும் நோயாளிகள், மூலிகை மருந்துகளை உபயோகப்படுத்தத் தொடங்கி குறைந்தது 1 மாதம் வரை பாதி அளவு ஆங்கில மாத்திரைகளை உபயோகித்துக் கொள்ளவும். ஏனெனில் மூலிகை மருந்துகள் உடலில் சேர குறைந்தது 20 நாட்களாவது தேவைப்படும். இரண்டாம் மாதம் முதலாக அலோபதி மருந்துகளை முழுவதுமாக நிறுத்திவிட்டு மூலிகை மருந்துகளை மட்டும் உபயோகிக்கலாம்.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : Dr.C.K.M.**குருபரன்** & Dr.C.K.M.**சபாபதி**, S/o.Dr.C.K. **மாணிக்கவாசகம்**

P.B. No:30, No:3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர்(N.A.A.) 635 601 ✆: 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ : 6424285, 6427638

**குறிப்பு:** சென்னை, வேலூர், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஓசூர், கிருஷ்ணகிரி, சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், ஆம்பூர், காஞ்சிபுரம், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 22 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.55/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.45/-ம் தலைமை முகவரிக்கு D.D. அனுப்பவும்.

# “எனக்கொரு தாகம் இருக்கிறது!”



• சுஜாதா

**வி**ஜயகாந்த் நடித்த படம். மொத்த தியேட்டரிலும் ஒரே ஒரு பெண்மணியைத் தவிர படத்தைப் பார்க்க வேறு யாருமில்லை. (விஜயகாந்த் ரசிகர்கள் டென்ஷனாகாமல் தொடர்ந்து படிக்கவும்) அந்தப் பெண்மணியின் பெயர் சுஜாதா. ராஜ் டீவியில் “தாகம் தாகம்” நிகழ்ச்சியில், “நான் மட்டுமே ஒரு படத்தை தியேட்டரில் உட்கார்ந்துகொண்டு தனியாகப் பார்க்க வேண்டும்” என்ற அவரது ஆசை அன்று நிறைவேறியது. (விஜய்காந்த் ரசிகர்களே ரிலாக்ஸாகி விட்டீர்களா?)

வேடிக்கை என்னவென்றால், சுஜாதா ‘தாகம் தாகம்’ நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டுக் கடிதமெழுதி, தமது விருப்பத்தை அவ்வாறு பூர்த்தி செய்து கொண்டவரல்ல. அந்த நிகழ்ச்சியில் புரொடக்ஷன் அசிஸ்டெண்டாக வேலை பார்த்தவர். ரசிகர்களின் விருப்பங்கள் கடிதங்களாக வருவதற்கு முன், ஓரிரு எபிஸோடுகளைத் தயாரித்து ஒளிபரப்ப வேண்டுமல்லவா? அவற்றில் ஒன்றுதான் மேற்படி ‘தியேட்டரில் தனியாக'ப் படப் பிடிப்பு!

பம்பாய் மாதுங்காவில் கல்லூரியில் பிஎஸ்ஸி படித்த சுஜாதாவுக்கு மேற்படியான பொறுப்பை எப்படிக் கொடுத்தார்கள்?

“தாகம் தாகம்' நிகழ்ச்சித் தொகுப்பாளரான அமிர்தா ராமை எனக்கு ஓரளவு தெரியும். அந்த நிகழ்ச்சி தொடர்பான விவாதத்தின்போது ஒரு முறை நானும் கலந்து கொண்டேன். தொலைக் காட்சி நிகழ்ச்சிகள் தயாரிக்கப்படும் அந்த சூழலைப் பார்த்தபோது மயக்கமும் பிரம்மிப்புமாக இருந்தது. என் ஆர்வத்தைக் கண்ட (அந்த நிகழ்ச்சியின் தயாரிப்பாளர்-கம் - இயக்குனரான) ராம்ஜி, நான் ஒரு வாய்ப்பைக் கேட்டவுடன், உடனடியாகத் தந்தார்.

காமிராவின் முன்னால் தோன்றுவதில், தனி ஆசை உண்டா?

“இல்லை. வேறு வழியில்லாததால் சினிமாவைத் தனியே பார்க்கும் எபிஸோடில் நடித்தேன். மற்றபடி காமிராவுக்கு முன் இயல்பாக நடிப்பது எவ்வளவு கஷ்டம் என்பதை நான் நன்றாக உணர்ந்திருக்கிறேன். பின்னணியில் குரல் கொடுக்க வேண்டிய ஒரு சந்தர்ப்பத்திலேயே நான் நாலு டேக் வாங்கினேன்!” என்கிறார்.

**ரா**ம்ஜி சிங்கப்பூர் போயிருந்தபோது இரு எபிஸோடுகளைத் தயாரிக்கும் பொறுப்பு இவரது குழுவின் தலையில் விழுந்தது. “கல்லூரிப் பெண்கள் சிலரை அழைச்சுக்கிட்டு எம்.ஜி.எம்.க்குப் போய் ரங்கராட்டினத்தில் சுற்ற வைத்த எபிஸோட் பாராட்டு பெற்றது. ஆனால் ‘பேட்டை தாதா போல் காய்கறி வியாபாரிகளிடம் போய் நான் தண்டல் வசூலிக்க வேண்டும். என்னைப் பார்த்த வியாபாரிகள் எல்லாம் நடுங்க வேண்டும்” என்று ஆசைப்பட்டவர் தொடர்பான எபிஸோட் குப்பர் ப்ளாப்.

“தாதா போல வேஷமிட்ட அந்த மனிதர் இளைஞன் கத்தியை நீட்ட, விஷயத்தைப் புரிந்து கொண்ட வியாபாரிகளுக்கு பயமே ஏற்படவில்லை. சிரிப்புதான் பொத்துக் கொண்டு வந்தது. சுற்றிவர வேடிக்கை பார்த்தவர்களின் சிரித்த முகங்கள் வேறு அப்படியே பதிவாகித் தொலைத்திருந்தது!” என்று கூறும் சுஜாதாவின் தாகம் என்ன?

“இன்னும் சில வருடங்களுக்கு நிகழ்ச்சித் தயாரிப்புப் பக்கமெல்லாம் நான் போகப் போவதில்லை. முழு நேர எம்பிஏ கோர்ஸ் படிக்கப் போறேன். அதற்குப் பிறகு விளம்பரப் படங்கள் தயாரிக்க ஆசை!”

— குல்லூ

வண்ணப்படம்: பிரவீன்குமார்




1997 ஆகஸ்ட் 31
ஈசுவர ஆவணி 15
மலர் : 56
இதழ் : 5

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## காமராஜ் ஆட்சிக்கு வாய்தா கொடுங்கள்!

'தமிழகத்தில் காமராஜர் ஆட்சி அமைப்போம். முதல்வர் பதவியை ஏற்க மூப்பனாரே பொருத்தமானவர்; தகுதியானவர்...'

- விருது நகரில் நடைபெற்ற த.மா.கா. கூட்டத்தின் முக்கிய அறைகூவல் இதுதான்.

தி.மு.க.-த.மா.கா. உரசல்கள் பற்றிய கேள்வி எழுந்தபோது அவை ஆளுங்கட்சிக்கும் எதிர்க்கட்சிக்குமிடையேயான ஆரோக்கியமான வாக்குவாதங்கள்தாம் என்று சமாதானம் கூறப்பட்டது.

அ.தி.மு.க - ம.தி.மு.க. புதிய கூட்டணி, விருதுநகரில் கடுமையான விமர்சனத்துக்கு உள்ளாயிற்று. 'தி.மு.க.-த.மா.கா, எக்காரணம் கொண்டும் இந்த அபாயகரமான கூட்டணியை ஜெயிக்க விடாது!' என்ற சூளுரையும் அதே விருதுநகரில் கேட்டது!

கட்சியின் செயல்திட்டம் சிறப்பாக இருந்தாலும் அடிப்படை நோக்கில் குழப்பமும் முரண்பாடும் தெரிகிறது. 'காமராஜ் ஆட்சி, மூப்பனார் முதல்வர்' என்றொரு பக்கமும் தி.மு.க. - த.மா.கா. நல்லுறவு தொடரும் என்று மற்றொரு பக்கமும் சொல்லப்பட்டது.

அ.தி.மு.க.வினரை ஆட்சிக்கு மீண்டும் வரவிடுவதில் உள்ள அபாயத்தை த.மா.கா. உணர்ந்திருந்தும் அது குறித்துப் போதுமான எச்சரிக்கை காட்டவில்லை.

ராஜீவ் காந்தி கொலை வழக்கு இத்தனை ஆண்டுகளாக நடத்தப்பட்டும் இன்னமும் முற்றுப் பெறவில்லை. குற்றவாளிகள் தண்டிக்கப்படவில்லை. பலர் இன்னும் கைதிகளாகவே சிறையிலிருக்கின்றனர்.




ஜெயலலிதா பேரிலான வழக்குகளும் இதே முறையில் இழுத்தடிக்கப்படுகின்றன. சட்டத்தை வளைக்கவும் அதிலுள்ள ஓட்டைகளைக் கண்டுபிடித்து அவற்றின் வழியே நழுவவும் ஒரு வழக்குரைஞர் பட்டாளமே 'ஜெ'வுக்காக இயங்கிக் கொண்டிருக்கிறது! அடுத்த தேர்தல் வரை வழக்குகளை இழுக்கடிக்கச் செய்து, தீர்ப்புகளைத் தவிர்ப்பதென்பது இந்த வழக்குரைஞர்களுக்குக் கஷ்டமாகவே இருக்காது.

இன்னும் நான்காண்டுகளில், ஊழல் குற்றச்சாட்டுகளும் 'ஜெ'யின் அராஜகமும் மறக்கப்பட்டுவிட, மக்கள் அவரை மீண்டும் முதல்வராக்கத் தயாராகிவிடுவார்கள்! எமர்ஜென்ஸிக்குப் பிறகு இந்திரா காந்தி விஷயத்தில் இது நடந்துள்ளதை நாம் பார்த்திருக்கிறோம்.

இந்த அக்கிரமத்தைத் தடுப்பதென்பது தி.மு.க. - த.மா.காவுடைய ஒருங்கிணைந்த செயல்பாட்டால் மட்டுமே சாத்தியம்.

'ஜெ' தோற்கடிக்கப்பட வேண்டும்; இரண்டாம் முறையாகப் பதிவாகும் தோல்வியே அவரது கடந்த கால தவறுகளுக்கான சரியான தண்டனையாகும்' என்பதை தி.மு.க. - த.மா.கா. இருவருமே உணர வேணடும். அதற்கேற்ப த.மா.கா. தனது செயல் திட்டத்தை மாற்றியமைக்க வேண்டும். காமராஜ் ஆட்சி கனவை இன்னும் சிறிது காலத்துக்கு ஒத்திவைப்பதில் தவறே இல்லை.

மாறாக, மும்முனைப் போட்டியை ஏற்படுத்திவிட்டால், குறைந்த வாக்குகளேயானாலும் அதிக இடங்களைப் பெற்று அ.தி.மு.க. கூட்டணி ஆட்சியமைக்க மலர்ப்பாதை அமைத்துக் கொடுத்ததாகிவிடும்!

## வீரப்ப கோபால்!

...ள் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறார்கள்; தமிழக காவல் துறையும் அதில் சோநது கொள்கிறது.

'நக்கீரன்' ஆசிரியர் கோபால் முயற்சியால் வீரப்பன் சரணடைய சம்மதித்து விட்டான்.




கொலை, கொள்ளை, கடத்தல் என்று எதற்கும் தயங்காத ஒரு நபரை பெரிய ஹீரோவாக்கிய பெருமையும் கோபாலைத்தான் சாரும். 'வீரப்பனைப் பிடிக்க முடியாமல் இருப்பதற்குக் காரணம் அரசியல்வாதிகள் பலர் அவனுக்கு உடந்தையானவர்கள் என்பதுதான்' - இதைச் சொல்லும் முயற்சியில் வீரப்பன் பேரில் ஒரு பச்சாதாபமே மக்களுக்கு உண்டாகும்படி செய்து விட்டார் கோபால்! அவனுடைய ஒவ்வொரு அசைவும் நடை, உடை பாவனையும் செய்தியாக்கப்பட்டன. சக்திவாய்ந்த டெலிவிஷன் மீடியம் மூலமாகவும் 'வீரப்பன் புகழ்' பரவப் பணியாற்றினார் கோபால்.

இதற்கெல்லாம் பரிகாரம் செய்வதாக அமைந்துள்ளன அவருடைய சமீபத்திய முயற்சிகள். தமிழக அரசின் தூதராக இருமுறை சென்று வீரப்பனை சந்தித்து, பிணைக் கைதிகளை விடுவிக்கச் சொல்லிக் கேட்டதுடன், ஒரு பிணைக் கைதியை விடுவித்து வரவும் அவரால் முடிந்திருக்கிறது. மூன்றாவது முறையாக அவர் பர்கூர் காட்டுப் பகுதிக்குள் தூது போய் வந்த பிறகு வீரப்பன் சரணடைவான் என்று நம்பப்படுகிறது.

ஆரம்பத்தில் விதித்த அடாவடி நிபந்தனைகளையெல்லாம் குறைத்துக் கொண்டு, வீரப்பன் குறைந்தபட்ச நிபந்தனைகளுக்குட்பட்டுச் சரணடைய வைத்துள்ளார் கோபால்.

இந்தக் குறைந்தபட்ச நிபந்தனைகளுக்குக் கூட அரசு உட்படக்கூடாது என்று வாதிடுவோர் இருக்கிறார்கள். வீரப்பன் வசம் உள்ள எட்டு உயிர்களுக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு கர்நாடக - தமிழக முதல்வர்களுக்கு இருப்பதை அவர்கள் உணர வேண்டும்.

கோபால், தமது சமீபத்திய முயற்சிகள் மூலமாக விளம்பரம் பெற்றிருக்கிறார் என்பது உண்மைதான். ஆனால், அரசால் செய்ய முடியாததை ஒரு பத்திரிகையாளரால் செய்ய முடிந்திருக்கிறது என்பது மிகப் பெரிய விஷயம்.

பத்திரிகை என்னும் சாதனத்துக்கு இருக்கின்ற வீச்சையும் பலத்தையும் அது காட்டுகிறது. இதன் காரணமாகவே அந்தச் சாதனத்தை மிகப் பொறுப்போடு கையாள வேண்டும்; பத்திரிகையாளர்களும் பத்திரிகை நிறுவனங்களும் கூட நேர்மை வழுவாமல் முன்னுதாரணமாக விளங்க வேண்டும்.

வீரப்பன் விவகாரத்தில் கோபாலுக்குக் கிடைத்துள்ள வெற்றி இதையெல்லாம் முன்னைக் காட்டிலும் அதிகமாக வலியுறுத்துகிறது.

# பயமுறுத்தும் பட்டியல்

## ஆயிரத்து நூற்று நாற்பத்திரண்டு கோடி ரூபாய்!

- கடந்த நிதியாண்டில் அரசு எதிர்பார்த்த நேர்முக வரி வசூலில் துண்டு விழுந்த தொகை இது!

இந்த நிதியாண்டின் முதல் மூன்று மாதங்களிலும் எதிர்பார்த்த அளவு நிதி அரசு கஜானாவுக்கு வந்து சேரவில்லை.

இந்த நிலையில்தான் வருமான வரி பாக்கி வைத்தவர்களின் பட்டியல், செய்தித் தாள்களிலெல்லாம் வெளியாகியிருக்கிறது. மிக அதிகமான தொகை பாக்கி வைத்து இப்பட்டியலில் முதல் இருபது இடங்களைப் பிடிப்பவர்கள் யார் யாரென்று பார்த்தால் மயக்கம் வராத குறைதான்.



ஹர்ஷத் மேத்தா முதலிடம்! இவர் வைத்துள்ள பாக்கி 5439 கோடி! பி.எச்.ஈ.எல்., ஓ.என்.ஜி.ஸி. ஆகிய பொதுத் துறை நிறுவனங்கள், வார்ஸன் அண்ட் டூப்ரோ, ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா, ஸிடி பாங்க், கிராஸிம் இண்டஸ்ட்ரீஸ், ஜி.ஆர்.ஸி. இண்டஸ்ட்ரீஸ், பீர்லெஸ் ஜெனரல் பைனான்ஸ் போன்ற 'படா ஷோக்கு' நிரம்பிய நிறுவனங்கள்... எல்லாமாகச் சேர்ந்து அரசுக்கு அல்வா கொடுத்துள்ளன.

நிறுவனங்கள் பாக்கி வைத்துள்ள வருமான வரி 4283 கோடி.

தனியார் பாக்கி வைத்துள்ள வருமான வரி 9691 கோடி. - (இதிலேதான் ஹர்ஷத் மேத்தாவின் 5439 கோடி அடக்கம்!)

ஆக மொத்தம் கிட்டத்தட்ட 14,000 கோடி ரூபாய் வரி கட்டப் படாமலிருக்கிறது! - இந்தக் கணக்கு வரி பாக்கி வைத்துள்ள 'Top Twenty' காரர்கள் வரைதான். இவர்களுக்குக் கீழே வருகிற சுமார்களின் வரிபாக்கியையெல்லாம் சேர்த்துக் கூட்டினால் மொத்த தொகை இருபதாயிரம் கோடியையும் தாண்டும்! - இருபதாயிரம் கோடி என்பது ஏறத்தாழ ஒரு வருடத்தில் அரசு வருமான வரி மூலம் பெறுகிற வருவாய்!

ஆகக் கூடி, வரி செலுத்த வேண்டியவர்கள் எல்லோரும் முறைப்படி அதைச் செலுத்தினால், போன வருடம் துண்டு விழுந்த தொகையெல்லாம் சரிகட்டப்பட்டு, உபரி வருமானம் கூட அரசின் கையில் தங்கும்.

ஆனால்... எத்தனையோ வரி சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தும், கறுப்புப் பணத்தை வெளுப்பாக்கிக் கொள்ள திட்டங்கள் அறிவிக்கப்பட்டும் அவற்றையெல்லாம் கொள்வாரில்லை.

'Voluntary Disclosure of Income திட்டத்தின் மூலம் எவ்வளவு வசூலாகும் என்று நினைக்கிறீர்கள்?' எனக் கேட்கப்பட்டபோது நிதியமைச்சர் திட்டவட்டமான பதில் தரவில்லை. அதற்கேற்றாற்போல் இத்திட்டம் முந்தைய வருஷங்களில் பலனளிக்காமலே போயிருக்கிறது. இந்த விஷயத்தில் நாம் முன் அனுபவத்திலிருந்து பாடம் பெறத் தவறிவிட்டோம்.

வரி வசூல் அமைப்பில் மிகப் பெரிய கோளாறு இருப்பதை நிதியமைச்சகம் உணர்ந்து, அதை சீர்திருத்த முற்பட்டால் அன்றி நிலைமை மாறாது.

'அடுத்த இருபது ஆண்டுகளில் 'ஏழை நாடுகள்' என்கிற பிரிவிலிருந்து இந்தியா வெளியேறிவிடும்' என்கிறார் நிதியமைச்சர். நம்பிக்கையூட்டும் அறிக்கைதான். ஆனால் வரி பாக்கி இப்படி பல கோடிக் கணக்கில் தொடருமானால் இருபதுடன் இருபது, இருபது என்று கூட்டிக் கொண்டே போகவேண்டியிருக்கும்!

— வி. கோபாலன்

● மாற்றுக் கட்சியினர், கணிசமான அளவில் ஒரு குழுவாக தி.மு.க.வில் சேர விருப்பம் தெரிவித்தால் சில அளவுகோல்கள் வைத்திருக்கிறார்கள். ம.தி.மு.க., (கறைபடாத) அ.தி.மு.க.வினர் ஆகியோருக்கு மாவட்ட கழக அளவிலேயே சேர்த்துக் கொள்ள அனுமதி உண்டு. ஆனால் தோழமை கட்சிகளில் இருந்து சேர்த்துக் கொள்வதானால் தலைமை கொஞ்சம் எச்சரிக்கையுடன் செயல்படுகிறது. சமீபத்தில் தர்மபுரி மாவட்டத்தில் த.மா.கா. மற்றும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியினர் கழகத்தில் சேர விருப்பம் தெரிவித்தபோது, தலைமை ஓ.கே. சொல்ல சிறிது காலம் எடுத்துக் கொண்டது.

● வை.கோ. மிகவும் குஷியாக இருக்கிறார். காரணம் இரண்டு: ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கையில் வை.கோ.வுக்கு பாதகமான அம்சங்கள் ஏதும் இல்லையாம். அடுத்து, பொதுத் தேர்தலில் குறிப்பிட்ட சதம் வோட்டு வாங்காததால் கை நழுவிப் போக இருந்த குடைச் சின்னத்தையும் ம.தி.மு.க.விடமே விட்டுவிட முடிவு செய்து விட்டதாம் தேர்தல் கமிஷன். "இதற்குக் காரணம், பொதுத் தேர்தலுக்குப் பிறகு உள்ளாட்சித் தேர்தலில், நாங்கள் வாங்கிய வோட்டு விவரத்துடன் மிகவும் திறமையாக எங்கள் பொதுச் செயலாளர் (வை.கோ.) கமிஷனுக்குமுன் வாதாடியது தான்!" என்கிறார்கள் ம.தி.மு.க.வினர்.

● கல்கத்தா மாநாட்டுக்குப் பின் தமிழ்நாடு காங்கிரஸ் சந்தோஷத்தில் துள்ளிக் கொண்டிருக்கிறது. சோனியா இனி மிகத் தீவிரமாக காங்கிரஸில் செயல்பட இருப்பதால்தான் இந்த சந்தோஷம். கல்கத்தா மாநாட்டில் கேசரிக்கும், சோனியாவுக்கும் அணிவிப்பதற்காகச் சென்னையிலிருந்து ஸ்பெஷலாக மாலைகள் சென்றன. ஏற்பாடு செய்தவர், தங்கபாலுதான். தங்கபாலுவுக்கு பேசுவதற்காக ஒதுக்கப்பட்ட நேரத்தையும் சேர்த்து சோனியாவுக்குக் கொடுக்கப்பட்டதாம்.


• பொங்கலூர் பழனிச்சாமி


• வை.கோ.

● திருப்பத்தூர் பகுதியில் மிகத் திறமையாகச் செயல்பட்டவர் மாவட்ட வன அதிகாரி உபாத்யாயா.

## வருத்தத்தில் ஓர் அமைச்சர்!

திருப்பத்தூர் தி.மு.க. எம்.எல்.ஏ. சண்முகம் மீது குற்றப்பிரிவு போலீஸ் விசாரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று அரசுக்குக் கடிதம் எழுதியவர் இவர். இந்த விவகாரம் பெரிய சர்ச்சையாக உருவானது ஒரு பக்கம் இருக்க, உபாத்யாயா இப்போது மாநில அரசுப் பணியில் இல்லை. மத்திய அரசுப் பணிக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு சென்று விட்டார்.


• சோனியா

● தமிழ்நாடு வன அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி கொஞ்சம் வருத்தத்தில் இருக்கிறாராம். வீரப்பன் விவகாரத்தில் சம்பந்தமே இல்லாமல் பொன்முடியும், ஆற்காடும் பேச்சு வார்த்தையில் கலந்து கொள்வதை விமர்சிக்கிறார்கள் கோட்டை அதிகாரிகள். கர்நாடகா அரசு வனத்துறை அமைச்சரையும் சட்ட அமைச்சரையும், ஒருங்கிணைத்து செயல்படுகிறது. இங்கே அவர்கள் இருவரும் கண்டு கொள்ளப்படாததின் காரணம் புரியவில்லை" என்றார் ஓர் அதிகாரி.


• தங்கபாலு

— தில்லப்பா

**பி**ரதமர் குஜ்ரால், ஊழலை எதிர்த்து சத்தியாகிரகம் செய்யச் சொல்லி மக்களுக்கு அழைப்பு விடுத்ததைக் கேட்ட பொது ஜனங்களில் ஒருவர்தான் அண்ணாசாமி. படியுங்கள் அவரது 'சத்தியாகிரகக் கதை'யை:

**இடம் : மின்வாரிய அலுவலகம்.**

**மணி : காலை 11.**

**அ. சாமி** : சார், 2, குப்புமுத்துத் தெரு. அண்ணாசாமி. புது கனெக்ஷனுக்கு அப்ளை பண்ணியிருந்தேன். மூணு மாசமாச்சு. பேச்சு மூச்சு இல்லியே?

**அ. சாமி** : கோவிச்சுக்காதீங்க சார். ஊழலுக்கு எதிரா சத்தியாகிரகம் பண்ணச் சொல்லியிருக்காரே குஜ்ரால்... அதுனால நீங்க நிச்சயமா வாங்க மாட்டீங்கன்னு...

**ஊழியர்** : அப்போ குஜ்ரால் கிட்டயே உங்க கனெக்ஷனைக் குடுக்கச் சொல்றதுதானே? இங்கே ஏன் வர்றீங்க?

**அ. சாமி** : ஹி... ஹி... ரொம்ப தமாஷா பேசறீங்க. அவர் மின்சார மினிஸ்டர் கூட இல்லே.



**ஊழியர்** : குஜ்ராலுக்கே புது கனெக்ஷன் வேணும்னாலும் எதானா கொடுத்தாத்தான். இல்லேன்னா மின்சாரக் கனவுதான்! அவருக்கே தெரியும். நீங்க சொல்லாண்டாம்.

**அ. சாமி** : அப்போ லஞ்சம் கொடுத்தாத்தான் கனெக்ஷனா? உமக்கு ஷாக் ட்ரீட்மென்ட் கொடுக்கத்தான் வேணும்!

**ஊழியர்** : ஷாக்கா! ட்ரீட்மென்ட்டா! கரன்ட் வேணும்னா கரன்ஸி கொண்டு வரணும். தெரிஞ்சுதா? இல்லேன்னா இடத்தைக் காலி பண்ணும்.

**அ. சாமி** : லஞ்சமா கேட்கறீங்க, லஞ்சம்? அடுத்த மாசம் 30 ஆம் தேதிக்குள்ள உமக்கு உத்தியோகமே போகப் போகுது, ஜாக்கிரதை!

**ஊழியர்** : நீங்க சுப்பிரமணியசாமியா,

**ஊழியர்** : யாருக்கு, உங்களுக்கா? பின்ன எப்படி வந்தீங்க?

**அ. சாமி** : கிண்டல் பண்றீங்களே, சார். டெபாசிட் எல்லாம் கூடக் கட்டியாச்சு...

**ஊழியர்** : வெறும் டெபாசிட்தானே? வேற எதானா கொடுத்தீங்களா?

**அ. சாமி** : இல்லே! டெபாசிட் ரசீது இருக்கு. போறாதா?

**ஊழியர்** : போறாதுன்னு நான் என் வாயால சொல்லணுமா? அப்றம் லஞ்சம் கேட்டார்னு ஆரமிச்சுடுவீங்க!

**அ. சாமி** : சீசீ... அப்படி எல்லாம் நீங்க கேக்கற ஆளா என்ன! எனக்குத் தெரியாதா?

**ஊழியர்** : உமக்கு ஒரு எழவும் தெரியாது!

## குஜ்ரால் சொல்றார், அண்ணாசாமி செய்யறார்!

இல்லே அண்ணாசாமியா! (அண்ணாசாமி கோபமாக வெளியேறுகிறார்)

**இடம் : கு. நீர் வ.கால் வாரியம்.**

**அ. சாமி** : இதானே வடிநீர் குடிகால் – சாரி, குடிநீர் வடிகால் வாரியம்?

**ஊழியர்** : இல்லேன்னா போயிடவா போறீங்க? என்ன வேணும்?

**அ. சாமி** : புது வீட்டுக்கு டிரைனேஜ் கனெக்‌ஷன் கேட்டிருந்தேனே. நீங்க ஒண்ணும் கவனிக்கலியே?

**ஊழியர்** : நீங்க எங்களைக் கவனிச்சீங் களா? இல்லியே?

**அ. சாமி** : உங்களை எப்படி கவனிக் கணும்னு சொல்லலியே நீங்க?

**ஊழியர்** : இதெல்லாம் சொல்லித் தெரியற கலை இல்லே, மிஸ்டர் குப்புசாமி.

**அ. சாமி** : நான் குப்புசாமி இல்லே, அண் ணாசாமி.

**ஊழியர்** : நிஜ சாமியே ஆனாலும், யார் யாரை எப்படி கவனிக்கணும்னு தெரிஞ் சிருந்தாதான் வேலை நடக்கும்!

**அ. சாமி** : இது ரொம்ப அக்கிரமம். மக்கள் லஞ்சமே கொடுக்கக் கூடாதுன்னு பிரதமர் டெல்லியிலே சொல்லியிருக்கார். லஞ்சத்துக்கு எதிரா சத்தியாகிரகம் பண் ணணும்னு வேற சொல்லியிருக்கார். அதுக்கு என்ன அர்த்தம்? நீங்க கேட்டாலும், நாங்க கொடுக்கக் கூடாதுன்னு தானே?

**ஊழியர்** : அந்தப் பேச்சை எல்லாம் நீங்க கேக்கக் கூடாதுன்னு அர்த்தம்! குடியரசு தினம், சுதந்தர தினம்னு சில சில நாள்கள்ள, இந்த மாதிரி ஃபாலோ பண்ண முடியாததை எல்லாம் பேசுவாங்க, மிஸ்டர் குப்புசாமி.

**அ. சாமி** : மறுபடி தப்பாச் சொல்றீங்க என் பேரை. நான் அண்ணாசாமி. குப்புசாமி இல்லே.

**ஊழியர்** : உமக்குப் புரியற மாதிரி சொல் றேன். குப்புசாமி கொடுக்க வேண்டியதைக் கொடுத்துட்டு கனெக்‌ஷன் வாங்கிட்டுப் போயிட்டார். நீங்கதான் அசட்டு அண்ணா சாமி!

**அ. சாமி** : கேவலம் சாக்கடை கனெக் ஷன். அதுக்கே லஞ்சமா?

**ஊழியர்** : ஆனா, நாங்க கனெக்‌ஷன் கொடுக்கலேன்னா வீடே சாக்கடை ஆயிடும், புரிஞ்சுதா?

**அ. சாமி** : ஒழிக லஞ்சம்! ஒழிக ஊழல்! (சீறிக் கொண்டு புறப்படுகிறார்)

**இடம் : டெலிஃபோன் எக்ஸ்சேஞ்ச்.**

**அ. சாமி**: டெலிஃபோனை ஷிஃப்ட் பண்ணச் சொல்லி ஆறு மாசம் ஆச்சு. இன் னும் பண்ணலியே? புது கனெக்‌ஷனுக்கே கைல காசு, வாய்ல தோசைங்கற மாதிரி, பணம் கட்டின உடனே டெலிஃபோன் கொடுக்கறதாச் சொன்னாங்களே...

**ஊழியர்** : தோசையைக் கைல வச்சுக்கிட் டுப் பேசிப் பாருங்க. யாருக்கானா கேக்கு தான்னு!

**அ. சாமி** : கிண்டலா பண்றீங்க? போன வாரம் கேட்டதுக்கு ஒரு நெம்பர் கொடுத் தாங்க. போன் நெம்பர்தான்னு நெனைச்சேன். வீட்டுக்குப் போனப்புறம்தான் தெரிஞ்சுது. அது எங்க போஸ்டல் 'பின்கோட்'. அப்றம் வந்து கேட்டா ராமனைப் பாரு, கிருஷ்ண னைப் பாருன்னு சொல் றாங்க. யாரைப் பார்க்கணும்?

**ஊழியர்** : என்னையே பாருங்க. வேற யாரையும் பாக்க வேணாம்!

**அ. சாமி** : உங்களைத்தான் பார்க்கறேனே. என்ன பண்ணச் சொல்றீங்க? சொல்லித் தொலையுங்க. எனக்கு அலஞ்சு அலஞ்சு பைத்தியமே பிடிச்சுடும் போலருக்கு.

**ஊழியர்** : கொடுக்கறதைக் கொடுத்துட்டா நீங்க ஏன் அநாவசியமா அலையணும்? எதுக்குப் பைத்தியம் பிடிக்கணும்?

**அ. சாமி** : அப்போ லஞ்சமா கொடுக்கச் சொல்றீங்க? பிரதமர் குஜ்ராலுக்குத் தெரிஞ்சா என்ன ஆகும் தெரியுமா?

**ஊழியர்** : என்ன ஆகும்?

**அ. சாமி** : உங்க உத்தியோகம் போயிடும்! அப்றம் நீங்களும் தெருத் தெருவா அலைவீங்க. உங்களுக்கும் பைத்தியம் பிடிக்கும்.

**ஊழியர்** : ஹஹ்ஹஹஹ்ஹா! குஜ்ராலுக் குத்தான் பிரதமர் உத்தியோகம் போகும். நாங்க அப்படியேதான் இருப்போம்!




# உண்மையின் உரைகல்!

✉ சுதந்தரத்தின் உன்னதத்தை உணரச் செய்தது மட்டுமின்றி, வாசகர்களை சுதந்தரப் போராட்ட காலத்திற்கே அழைத்துச் சென்று விட்டது கல்கி மலர்.

விசலூர் – 1, ஜி. ஜி. கிருஷ்ணன்.

✉ சுதந்தரப் பொன்விழா மலர் அரியதோர் என் சைக்ளோபீடியா! மூப்பதே ரூபாய்க்கு மூவர்ண மாலையைச் சூடிவிட்டீர்கள்! ஒவ்வொரு பக்கமும் 'சும்மா வரவில்லை சுதந்தரம்' என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டியது! வாழ்த்துக்கள்.

வேலூர் - 6, எல். கோபாலகிருஷ்ணன்.

✉ மலர், கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக இருந்தது. குறிப்பாக, சுதந்தரத்திற்காகப் போராடிய தியாகிகளைப் பற்றி பெட்டிச் செய்திகளாகப் போட்டு புகைப்படங்களையும் பிரசுரித்திருந்தது அருமை.

பாளையங்கோட்டை, ஏ. குமாரவேலு.

✉ உண்மையான நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்றுடனும், ஆழ்ந்த சமுதாய அக்கறையுடனும், விரிந்த பார்வையுடனும் வீச்சுடனும், சுதந்தர மலர் உருவாக்கப் பெற்றுள்ளது. பாதுகாத்து வைக்கப்பட வேண்டிய கருத்துப் பெட்டகம் என்று சொன்னால், அது வெறும் உபசார வார்த்தையல்ல; மனந்திறந்த உண்மையேயாகும்.

திருநெல்வேலி, தி. க. சிவசங்கரன்.

✉ சுதந்தரப் பொன்விழா மலர் மிகச் சிறப்பாக அமைந்திருக்கிறது. பாதுகாப்பு, கல்வி, தொழில், வேளாண்மை, பொருளாதாரம், விளையாட்டு, சினிமா, விண்வெளி ஆய்வு, பத்திரிகை தர்மம் என அனைத்து அம்சங்களையும் அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டியிருப்பது அருமை. விடுதலை வரலாற்றின் முக்கிய நிகழ்வுகளை வெவ்வேறு ஓவியர்களின் தூரிகைகள் வெகு நேர்த்தியாகப் பதிவுசெய்திருக்கின்றன. ஐம்பது ஆண்டுகால வளர்ச்சியை, சாதனையை விளக்கியதோடு மட்டுமல்லாமல் ஊழல் அவலங்களையும் தொகுத்து இருப்பது (ஊழல்களுக்கும் பொன்விழா) உண்மை நிலவரத்தின் உரைகல்லாய் அமைந்திருக்கிறது.

சென்னை – 34, மு. சிவலிங்கம்.

**அ. சாமி :** அவர் ஊழலுக்கு எதிரி. லஞ்சத்துக்குச் சாவுமணி அடிக்கப் போறவர்.

**ஊழியர் :** உங்க வீட்டுல டெலிஃபோன் மணி அடிக்கணும்னா இந்த லஞ்சம் கிஞ்சம் எல்லாத்தையும் பத்தி மறந்துடணும். கொடுக்கிறதைக் கொடுத்துட்டா, லைன் வந்துரும். ரைட்?

**அ. சாமி :** நோ. ராங்!

(ஆவேசத்துடன் வெளியேறுகிறார்)

**புதுதில்லி. பிரதமர் இல்லம். அதிகாலை. மக்களுக்கு 'ஜனதா தர்சன்' தருகிறார் பிரதமர்.**

**பிரதமர் :** வேலை வாங்கிக் கொடுக்கணும். பெண்ணுக்கு வரன் பார்த்துக் கொடுக்கணும். பாங்க் லோன் வாங்கிக் கொடுக்கணும்னு எல்லாம் பெட்டிஷன் கொண்டு வந்திங்கன்னா, நான் என்ன பண்றது?

**அ. சாமி :** பிரதமர் சார், நான் அந்த மாதிரி எந்த பெட்டிஷனும் கொண்டு வரலே.

**பிரதமர் :** குட். நீங்கதான் என்னை நல்லாப் புரிஞ்சிக்கிட்டிருக்கீங்க. உங்க பேர்? ஊர்?

**அ. சாமி :** என் பேரு அண்ணாசாமி. ஊர் சென்னை.

**பிரதமர் :** நினைச்சேன்.

**அ. சாமி :** நீங்க சொன்னதைக் கேட்டு லஞ்சம் கொடுக்காம மின்வாரியம், குடிநீர் வடிகால் வாரியம், கார்ப்பரேஷன், டெலிஃபோன் எக்ஸ்சேஞ்ச் எல்லா இடத்துலயும் போய் ஊழலுக்கு எதிரா சண்டை போட்டுட்டு வந்தேன்.

**குஜ்ரால் :** எதுக்கு சண்டை போடணும்? அண்டை அயலாருடன் சண்டை போட வேண்டாம் என்பதுதானே குஜ்ரால் கொள்கை?

**அ. சாமி :** நீங்கதானே லஞ்ச ஊழலை எதிர்த்து சத்தியாகிரகம் பண்ணச் சொன்னீங்க? உங்க குறுந்தாடி சத்தியமாச் சொல்லுங்க, சொன்னீங்களா இல்லியா?

**பிரதமர் :** ஆமா, ட்ரு இனஃப். ஆனா சத்தியாகிரகம்தானே பண்ணச் சொன்னேன்? லஞ்சம் கொடுக்க வேணாம்னு சொன்னேனா? டிட் ஐ ஸே இன் ஸோ மெனி வேர்ட்ஸ்?

**அ. சாமி :** பின்ன லஞ்சத்தை எதிர்த்து சத்தியாகிரகம் பண்றதுன்னா என்ன அர்த்தம், மிஸ்டர் பிரைம் மினிஸ்டர்?

**பிரதமர் :** இதுல எல்லாம் அர்த்தம் பார்க்க ஆரம்பிச்சீங்கன்னா நீங்க சராசரி இந்தியப் பிரஜையா இருக்கறதுக்கே அர்த்தம் இல்லே மிஸ்டர் அண்ணாசாமி. யு ஷுட் நோ தட். இதெல்லாம் ஒரு அகேஷனுக்குப் பேசற பேச்சு... அவ்வளவுதான். நாட் டு பி டேக்கன் ஸீரியஸ்லி வேர்ட் பை வேர்ட். நானே என் அலுவலகத்துல லஞ்ச ஊழல் தடுப்பு ஸெல் ஆரம்பிச்சும், அதுக்கு வேற தலைவரைப் போட்டுட்டேன். டோன் யு நோ தட்? யூ ஸீ..

(அண்ணாசாமி 7, ரேஸ்கோர்ஸ் சாலை இல்லத்திலிருந்து தலைதெறிக்க ஓடுகிறார்)

— சித்தார்த்

# குஜராத்தில் ஒலிக்கப் போகும் கும்பகோணத்து மணி!

இரண்டாயிரத்து எழுநூறு கிலோ எடை. ஆறு அடி, மூன்று அங்குல உயரம். 15 அடிக்கும் மேலாக சுற்றளவு. நாக்கு சைஸ் மட்டும் .75 டன்.

அகமதாபாதிலுள்ள ஸ்ரீ கண்டகர்ண மகாவீர் கோவிலுக்காக உருவாகி வரும் மகா பிரும்மாண்ட மணியைப் பற்றிய குறிப்புகள் தாம் முதல் பேரா.

குஜராத்தில் ஒலிக்கப் போகிற இந்த மணி உருவாவது, கும்பகோணத்தில். வடிவமைத்துக் கொண்டிருப்பவர் அருண ஜடேஸ்வர ஸ்தபதி; தமிழர்.

கிட்டத்தட்ட ஆறு மாத காலமாக சுமார் முன்னூறுக்கும் மேற்பட்ட கலைஞர்கள் இவரது தலைமையில் இரவு பகலாக உழைத்து, உருவாக்கி வரும் இந்த மணி, மரபு வழிக் கலையின் சிறப்பையும் கைத் தொழில் நுணுக்கத்தின் வெளிப்பாட்டையும் எடுத்துக் காட்டுவதாக அமையும் என்கிறார் அருணஜடேஸ்வர ஸ்தபதி.

எப்படிக் கிடைத்தது இந்த வாய்ப்பு?

"மும்பைத் தொழிலதிபர் காலா மற்றும் இங்கே குடந்தையிலுள்ள சில குஜராத்தி அன்பர்களும் கேட்டுக் கொண்டதன் பேரில்தான் தொடங்கினேன். மொத்தம் ரூ. பத்துலட்சம் செலவு பிடித்திருக்கிறது!" என்றார் ச. சாதாரணமாக!



இந்த மணிக்கு இரண்டு சிறப்பு: முழுக்க முழுக்க 'பெல் மெட்டலில்' தயாரான முதல் மணி இதுதான். இரண்டாவது சிறப்பு- (இதுதான் முக்கியம்) மணி அடிக்கப்படும்போது டிங் டாங் கேட்காது!மாறாக 'ஓம், ஓம்!'

அருணஜடேஸ்வர ஸ்தபதியின் தந்தையார் ராமசாமிதான் முதல் முதலில் மகாத்மா காந்தியின் சிலையைச் செய்தவர். இன்றும் ஜயங்கொண்டத்தில் அச்சிலையைக் காணலாம்!

அப்பாவை அடியொற்றி இந்தச் 'சிற்பப் பிள்ளை' வடித்தவை - தஞ்சையிலுள்ள ராஜராஜ சோழன் சிலை, திருவிடைமருதூர் கோவிலிலுள்ள நடராஜர் சிலை, பழநி கோவிலின் அபிஷேக மூர்த்தி எனப்பல.



• அருணஜடேஸ்வர ஸ்தபதி

கோவிலுக்கான திருவுருவங்கள், இப்போது இந்த மெகா மணி என செய்து கொண்டிருந்தாலும், "நான் அதிகம் செஞ்சது அண்ணா, எம்.ஜி.ஆர். சிலைகள்தாங்க!" என்கிறார் இவர்.

— மா. உலகநாதன்

சென்ற வாரத்தில் குறிப்பிடத்தக்கது விடுதலைப் பொன்விழாதான். இண்டியா கேட்டிலிருந்து வெற்றிச் சதுக்கம் வரை போட்விளப் மைதானம் விழாக்கோலம் பூண்டது. தில்லி அரசு ஏற்பாடு செய்த சுதந்தரப் போராட்ட தியாகிகள் அணிவகுப்பு, ஏ.ஆர். ரஹ்மானின் இசை, லேசர் காட்சி, நாடாளுமன்றத்தில் நள்ளிரவு நிகழ்ச்சிகள் தில்லியில் மட்டுமல்ல, நாடெங்கும் கவனிக்கப்பட்டன.

• பூலான் தேவி

தியாகிகள் அணிவகுப்பு முடிந்து கொடிகளை தலைவர்களிடம் கொடுத்தனர். வாழ்த்துரையைத் துவக்கிய தில்லி முதல்வர் சாஹிப்சிங் வர்மா, நேதாஜி, வீர சாவர்க்கர் ஆகியோரைக் குறிப்பிட்டு, காந்தி, நேரு பெயர்களை ஒதுக்கினார். அரசியல் கலக்கவும் தவறவில்லை. பிரதமர் குஜ்ரால், முன்னாள் பிரதமர்கள் வி.பி.சிங், சந்திரசேகர், நரசிம்மராவ், வாஜ்பாய் ஆகியோர் மேடையில் இருக்கையில், நாற்காலிப் பேராசை நிலவுகிறது என்று அவர் பேசியதைக் கேட்டு பலர் முகம் சுளித்தனர். ஹவாலா வழக்கில் பெயர் அடிபட்டதால் தார்மீகமாக மதன்லால் குரானா முதல்வர் பதவியிலிருந்து விலகியதால் முதல்வரானவர் சாஹிப் சிங் வர்மா. நீதிமன்றம் ஹவாலா வழக்கிலிருந்து குரானாவை விடுவித்துவிட்ட பிறகு கௌரவமாகப் பதவி விலகி, குரானாவுக்கு வழிவிடாத சாஹிப்சிங், 'நாற்காலி ஆசை' பற்றிப் பேசுகிறார் என்றால்... மனம் நொந்து போயிருக்கிற குரானா ஏகாந்தவாசமாக யாரும் அறியாத இடத்துக்குப் போயிருக்கிறார் என்ற தைரியமோ?

# யாருக்கு



• லதாமங்கேஷ்கர்

• தமிழகத்திலிருந்து கலைஞர் வழியனுப்பி வைக்க, 56 சுதந்தரப்போராட்ட தியாகிகள் 13ஆம் தேதி மதியம் தில்லி வந்தபோது புதுதில்லி ரயில் நிலையத்தில் சிறப்பான வரவேற்பளிக்கப்பட்டது. அமைச்சர் டி.ஆர்.பாலு உட்பட தி.மு.க. நாடாளுமன்ற

உறுப்பினர்கள் பலரும், தில்லித் தமிழ்ச்சங்கத்தினரும் தியாகிகளை வரவேற்றனர். த.மா.கா. எம்.பிக்கள், ஒருவரையும் காணோம். ஏன்?

தில்லித் தமிழ்ச் சங்கத்தில் சுதந்தர தினத்தன்று அவர்களுக்கு அளிக்கப்பட்ட சிறப்பான வரவேற்பில், அமைச்சர் ப.சிதம்பரம் அமைதியாக

# 'நாற்காலி ஆசை'?

வந்து பார்வையாளர் வரிசையில் சற்றுநேரம் இருந்துவிட்டுப் போய்விட்டார். அமைச்சர் என்.வி.என் சோமுவும் தி.மு.க. நாடாளுமன்ற உறுப்பினர்களும் தியாகிகளைப் பாராட்டினர். அடக்கத்தோடு ஆசிகளை வேண்டினர். (தியாகிகளை வழியனுப்பி வைத்து, தமிழ்நாடு இல்லத்தில் தங்கவைத்து உரியமுறையில் பெருமைப்படுத்திய கலைஞரைப் பாராட்டுவதில் போட்டி போட்டனர் என்பது வேறு விஷயம்.) தில்லித் தமிழ்ச் சங்கத்தினர் மூப்பனாரைச் சந்தித்து, ரயில் நிலையத்துக்கு த.மா.கா.வினர் யாரும் வராததால் சங்கத்துக்கு வந்தாவது எம்.பிக்கள் தியாகிகளைப் பாராட்ட வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அவரும் எம்.பிக்கள் வருவார்கள் என்றார். ஆனால் ஒரு எம்.பி.யும் தலைகாட்டவில்லை. தியாகிகளுக்கு இதில் மிகுந்த மனவருத்தம். அதுமட்டுமல்ல. மாநிலங்களவை உறுப்பினரும் காந்தியவாதியுமான அறம் மறைவையொட்டி நாடாளுமன்றம் ஏற்பாடு செய்த இரங்கல் கூட்டத்துக்கும் த.மா.கா.வினர் வரவில்லை. தி.மு.க.வினர் பலர் கலந்து கொண்டனர். எப்போதும் மூப்பனார் வீட்டிலேயே பழிகிடக்கிறவர்களுக்கு இதற்கெல்லாம் ஏது நேரம்!

● 1947 ஆகஸ்ட் 14ஆம் நாள் இரவில் சுசேதா கிருபளானி 'சாரே ஜஹான் சே அச்சா' பாடியதற்கும், 1997 ஆகஸ்ட் 14 இரவில் லதா மங்கேஷ்கர் பாடியதற்கும் என்ன வித்தியாசம் என்று கேட்டார் ஒரு தியாகி. முன்னவர் பாடியது ஆத்மார்த்தமாக இருந்தது. பின்னவர் பாடியது ஆடம்பரமாக இருந்தது என்றார் ஒருவர். முன்னதில் திறமை குறைவு- உணர்ச்சி அதிகம், பின்னதில் திறமை அதிகம்- உணர்ச்சி குறைவு என்றார் மற்றொருவர். சரிதானா? ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கேட்டவர்கள் இருந்தால் சொல்லுங்களேன்!

● 14ஆம் தேதி நாடாளுமன்றத்தில் முன் அமைதியாக தர்ணா செய்து கொண்டிருந்தார் நாடாளுமன்ற



• மூப்பனார்



• என்.வி.என். சோமு

உறுப்பினர் பூலான்தேவி. அரசியல் எதிரியான மாயாவதியின் அரசு தன்மீதான பழைய வழக்குகளுக்கு மீண்டும் உயிர் கொடுத்துக் கொண்டிருக்கிறது என்று பத்து நாட்களுக்கு முன் நாடாளுமன்றத்தில் முறையிட்டு அழுதவர் இவர். 11 ஆண்டுகளை சிறையில் கழித்தபிறகு இன்னும் எதற்காக வழக்குகள் என்பது இவருடைய கேள்வி. இவர் சொல்வதும் நியாயம்தான், இல்லையா வீரப்பன்...?

— புதியவன்

அ. அமராவதி

இன்றைய ஆட்டத்திற்கு வர பெருமாளுக்கு கொஞ்சங்கூட சம்மதமில்லைதான். வெறகடிச்ச கம்பு வெறகுக்கு மேலங்கறத தெரியாதவனா என்ன பெருமாளு! இருந்தாலும் அவன் பெண்டாட்டி வள்ளிதான் பேசி கெஞ்சி கூத்தாடி அனுப்பி வைத்து விட்டாள். பெண்டாட்டியின் கெஞ்சலுக்கும், கொஞ்சலுக்கும் மசியாத ஆள்தான் பெருமாள். இருந்தாலும் சந்தர்ப்பமும், சூழ்நிலையும் அப்படியாகி விட்டது.

கட்டிலிலிருந்து கீழே இறக்கிப் போட்டு இரண்டு நாட்களாகி விட்டது. நார்க்கட்டிலுக்கு பக்கத்தில் கீழே நாராய் கிடக்கும் பெருமாத்தாவைப் பார்க்கப் பார்க்க, பெருமாளுக்கு அழுகை அழுகையாக வந்தது. தான் வயிற்றிலிருக்கும்போதே, தன்னைப் பெற்றவன் இறந்துவிட, சாகும் வரை தன்பொருட்டே வாழ்ந்த அம்மா அசைவற்று... தன்னைச் சுற்றிலும் என்ன நடக்கிறதெனக் கூட புரியாமல், பார்த்த விழி பார்த்தபடி இருக்க... உயிரெல்லாம் இங்கே இருக்க, தன்உடல் மட்டும் எப்படி அங்கே போய் ஆட முடியும்?

"என்ன மாமா, சவலைப் புள்ளையாட்டம் இந்த புடிவாதம் புடிக்கிறீக?". வள்ளியின் குரல்கேட்டு சிந்தனை கலைந்தவனாய் நிமிர்ந்து பார்த்துக் கண்கலங்கினான் பெருமாள்.

"நீ புரியாம பேசாதமா. அம்மாக்கு இப்பிடி இழுத்துக்கிட்டு கெடக்கு. கடைசி காலத்துல பக்கத்துல இல்லாம போயிட்டா, பெரும்பாவம் வந்து சேரும் புள்ள."

"ஆமா, இப்ப நீதான் புரியாம பேசற. பாவம் செஞ்சவன பாத்துட்டு வா. புண்ணியஞ் செஞ்சவன புடிச்சிட்டு வான்னு ஆகிப் போச்சு காலம். இப்ப போயிட்டு அந்தி சாயறதுக்குள்ள வந்துரப் போறே. அதுக்குள்ள ஒண்ணும் ஆயிராது. இப்ப மூணு நாளா இப்படித்தானே இழுத்துக்கிட்டு கெடக்கு. கூப்புட வந்தவுகளை அவசரப்பட்டு அனுப்பிராத மாமா. யோசிச்சி பாத்துட்டு போய்ட்டு வா."



"நானும் இப்ப லாயக்கில்லைன்னு சொல்லிப் பாத்துட்டேன். அவுக போகற வழியக் காணோம். ஒஞ்செட்டு தான் வேணும் பெருமாளுனு ஒத்தக் கால்ல நிக்காக" பெருமூச்சு விட்டான் பெருமாளு.

"நீயும் படக்குனு முடியாதுனு சொல்லீராத மாமா. நீயில்லாட்டி கீழத்தெரு சம்முகஞ்செட்ட கூட்டிட்டு போவாக. நீயின்னா வாயி கட்டா போகும். திடுதிப்புனு அத்தைக்கு ஒண்ணுல்லாட்டி ஒண்ணு ஆயிட்டா, கட்ட செலவுக்கு என்ன பண்றது? தொட்டு, தொடச்சி பாத்தாலும் அஞ்சு நூறோ, ஆறுநூறோ ஆகும். இன்னைக்கு செட்டுக்குப் போனா, எப்பிடியும் முந்நூறு, நானூறு கெடச்சாலும் கூடமாட கையகால உதறி சமாளிச்சிக்கிடலாம். நாஞ் சொல்றதையும் கொஞ்சம் யோசிச்சிப் பாரு மாமோவ்" வள்ளி எழுந்து போய் விட்டாள்.

யோசித்தவாறே அம்மாவைப் பார்த்தான் பெருமாள். நெஞ்சுக்கும், தொண்டைக்கும் இழுத்துக் கொண்டிருந்தது. இமையை மூடித்திறந்தால், அந்த அவகாசத்தில் கூட தாயின் உயிர் தனக்குத் தெரியாமல் பிரிந்து விடுமோ என்பது போல் இரு கண்களையும் விழித்துப் பார்த்தபடி கண்களிலிருந்து வழிந்த கண்ணீரைத் தோளில் கிடந்த துண்டால் துடைத்துக் கொண்டான். இன்று செட்டு கூட்டிக் கொண்டு போவதில் துளியும் இஷ்டமில்லை பெருமாளுக்கு.

இருந்தாலும் வள்ளி சொல்வதிலும் கொஞ்சம் நியாயமிருப்பதாகவே பட்டது பெருமாளுக்கு. அம்மாவுக்கு என்னமும் ஆகிவிட்டால், செலவுக்கு யாரைப் போய் கேட்பது?

வறட்டு வெயில் காலத்தில், வாய்க்கரிசி போடக்கூட வழியில்லாத சமயத்தில் யாரிடம் போய்க் கைநீட்டுவது? வீட்டுக்கு வீடு வாசப்படி. வேற வழியில்லாமல் செட்டை கிளப்பிக் கொண்டு வந்தாகிவிட்டது.



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்
மூன்றாம் பரிசு 1500/- பெறும் கதை

தத்தம் பைகளில் கொண்டு வந்த மேக்கப் சாமான்களை எடுத்து, அவரவர்களுக்கு பிடித்தமான மேக்கப்பை போட்டுக் கொண்டு வந்து, இழவு வீட்டிற்குப் போய், இறந்தவரைப் பார்த்தார்கள். முகமே தெரியாத அளவுக்கு மாலை போடப்பட்டிருந்தது. உயரமாய் சாந்தமான முகத்துடன் வேட்டி, சட்டையில் கம்பீரமாக சாத்தி வைக்கப்பட்டிருந்தது. இரண்டு பக்கமும் சுவரில் அப்பியிருந்த சாணியில் எரிந்துபோன ஊதுவத்தியை எடுத்துவிட்டு, கொத்தாக ஊதுவத்திகளை செருகியிருந்தார்கள். தரையில் இரண்டு பக்கமும் குத்துவிளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. மேலே மிக மிக மெதுவாக காத்தாடி சுற்றிக் கொண்டிருந்தது. தலைக்கு மேலே சின்னச் சின்ன பல்புகள் எரிந்து எரிந்து அணைந்து கொண்டிருந்தது.

கால்மாட்டில் ஒரு கிழவி,

"பட்டாளி ஐயா நீ
பத்துநாள் படுக்கலியே!
நாலுநாள் படுக்கலியே
நல்லசாவு வந்திருச்சே!"

என தலையை விரித்துப் போட்டபடி ஒப்பாரி வைக்க, மற்ற பெண்களும் ஒப்புக்காக அழுது கொண்டிருந்தார்கள். அந்தக் கிராமத்திலேயே வயசாளி அவர்தானாம். நூறு வயது நெருங்கி விட்டதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். தன் அம்மாவும் நூறு வயது வரை இருக்கக் கூடாதா? என ஏக்கமாக இருந்தது. நான்கு மூலைகளிலும் ரேடியோ கட்டியிருந்தார்கள். இரவில் வீடியோவில் படம் பார்த்ததற்கு சாட்சியாக சட்டை போடாத ஏழெட்டு சிறுவர்கள் தெருவில் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

துட்டி வீட்டு ஆட்டத்தை எப்பொழுதும் பெருமாள்தான் தொடங்கிவைப்பது வழக்கம். காலிலிருந்து கேட்கும் சலங்கை சத்தமாகட்டும், வாய்வழியே வரும் பாட்டு சத்தமாகட்டும் பெருமாள்தான் முதலில். தன்னால் இனி ஆட்டத்திற்குப் போக முடியாது என்ற சூழ்நிலையில் வாத்தியார் கோவிந்தன், பெருமாளை வாத்தியாராக்கிவிட்டு ஓய்வெடுத்துக் கொண்டார்.

இறந்தவர்களைப் பற்றி விசாரித்து தெரிந்து கொண்டு, அதற்கேற்றாற்போல் ஒப்பு வைத்து பாடி, கேட்பவர்களையும் அழ வைப்பதில் பெருமாள் கெட்டிக்காரன்.

இறந்தவரைப் பார்த்துவிட்டு வந்து மைக்கைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டு வந்து, பாட வாயைத் திறந்த பெருமாளுக்கு குரல் நடுங்கிற்று. நெஞ்சுக்கும், தொண்டைக்கும் இழுத்துக் கொண்டு கிடக்கும் அம்மாவின் முகம் நினைவில் எட்டிப் பார்த்துவிட்டுச் சென்றது. எல்லோரையும் தன்னையே பார்ப்பது போல் அவமானமாக இருந்தது.

தனக்கு ஜோடியாக ஆண்வேடம் போட்ட சுடலையை சாடை காட்டி கூப்பிட்டு பாடச் சொன்னதில் அவனுக்குப் பரம சந்தோஷம். இதுவரை பின்பாட்டு மட்டுமே பாடிவந்த தனக்கு எதனால் இப்படியொரு வாய்ப்பு வந்ததென்று புரியாமல், சந்தோசமாக பாடிக் கொண்டிருந்தான். இழவுக்கு வந்தவர்களெல்லாம் தங்களையே வேடிக்கை பார்ப்பதில் எங்காவது ஓடிப் போய் ஒரு மூலையில் உட்கார்ந்து அழவேண்டும் போலிருந்தது. எத்தனை இழவு வீட்டில் ஆடி இருக்கிறோம். இன்று மட்டும் என்ன வந்தது தனக்கு? பெருமாளுக்கு அயர்ச்சியாக இருந்தது.

பெருமாளுக்குப் பிச்சை கேட்டு நிற்பது போல் அவமானமாக இருந்தது. இதுநாள் வரையில் அவன் அப்படி உணர்ந்ததேயில்லை. சொந்தத்துல எவனாச்சும் ஆட்றத பத்தி கேவலமா பேசினாக் கூட, "பொய் சொன்னா தப்பு, களவாண்டா தப்பு. நான் ஆடுதேன். துட்டு வாங்குதேன். இதுயென்ன கேவலம்னு அடிச்சுப் பேசற பெருமாளுக்கு இப்போது ஆடாமல் சலங்கையில் ஒலி எழுப்பும்போது உண்டாகும் சல்சல் எனும் சலங்கை ஒலி நெஞ்சில் சம்மட்டியால் அடிப்பது போலிருந்தது.

மற்ற நேரமாயிருந்தால் தன் ஒடிசலான உடம்பை வளைத்து, நெளித்து, தலையை சிலுப்பிக் கொண்டு ஆடுவான். ஒல்லியா ஒருத்தன் பொம்பள வேசம் போட்டிருக்கானே, அவன்தான் நல்லா ஆடுதான் என்று பேசிக் கொண்டு போவார்கள்.

**மீ**ண்டும் திடுதிப்பென தன் அம்மாவின் ஞாபகம் வந்தது பெருமாளுக்கு. நேரம் நடுப்பகலைத் தாண்டியிருக்கும். எப்படியும் மூன்று மணிவாக்கில் பிணத்தைத் தூக்கி விடுவார்கள். எப்படியும் இன்று இருநூறு ரூபாய் சம்பளம் கிடைக்கும். அம்மாவுக்கு கொஞ்சம் பூந்தி வாங்கிக் கொண்டு போக வேண்டும். ஊறிப் போயிருக்கும் பூந்தியை நாக்குக்கும், மேலண்ணத்திற்கும் இடையில் வைத்து நசுக்கி, பல்லில்லாத பொக்கைவாயினால் தின்பதைப் பார்க்க வேண்டும். தான் அம்மாவுக்கு வாங்கிக் கொண்டு போகும் அந்த பூந்தியையும் பேரனுக்கு கொஞ்சம், மகனுக்கு கொஞ்சம், மருமகளுக்கு கொஞ்சம் என பங்குவைத்துக் கொடுத்துவிட்டு, மனம் நிறைந்து போவாள்

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

"ஐயோ டாக்டர்! எனக்கு நெஞ்சு வலி!"

"ஊ.மு.வா, ஊ.பி.யா?"

"அப்படீன்னா?"

"ஊழல் செஞ்சு பிடிபடுவதற்கு முன்பா, அல்லது ஊழல் செஞ்சு பிடிபட்ட பின்பான்னு கேக்குறேன்!"

– பாஸு



அம்மா.

கூட்டத்தை தன்வசம் வைத்துக் கொள்ளும் கலை சுடலைக்கோ, தன் செட்டிலுள்ள மற்றவர்களுக்கோ வரவில்லையென்பது அப்பட்டமாக இருந்தது. "இதெல்லாம் ஒரு ஆட்டமுன்னு மெனக்கெட்டு ஆயிர ரூபா கொடுத்து கொண்டாந்திருக்காக பாரு. எல்லாம் பணம் பண்ற வேலை." ஆளாளுக்கு புலம்பிக் கொண்டு போனார்கள்.

தான் மட்டும் பாட ஆரம்பித்தால், அஞ்சு, பத்துனு ஆளாளுக்கு சட்டையில் ரூபாய் குத்துவார்கள். அதும்போக இந்த துட்டிக்கு எக்கச்சக்க கூட்டம். நன்கொடையா வர்ற பணமே சம்பளத்தை விட அதிகமாயிருந்தாலும் இருக்கும். தங்கத்துலதான் முடியல்லே. அந்தப் பணத்தை வெச்சு, கவரிங்களையாச்சும் பாம்படம் வாங்கிப் போடலாம். பாம்படம் போட்டுக் கொண்டு சிரித்தபடி பார்க்கும் அம்மாவின் முகம் ஞாபகத்தில் வந்து போயிற்று. நேரத்தை கடத்துவதற்காக ஏதேதோ பாடி விட்டு, ஒரு சினிமா பாட்டை எடுத்துவிட ஆரம்பித்தான். ஆளாளுக்குக் குடித்துவிட்டு ஆட்டத்தை அசிங்கமாக விமர்சித்துக் கொண்டிருந்தார்கள். தான் மட்டும் ஒப்பாரி பாட்டு ஒன்றை எடுத்துவிட்டால் எல்லோரும் வாயை கப்பிப் என மூடிவிடுவார்களென்பது பெருமாளுக்கு நன்றாகத் தெரிந்தது. பாட வாயைத் திறந்தால் அம்மாவின் முகம் மனதில் தோன்றி, குரல் தொண்டையை விட்டு வெளியே வர மறுத்தது. தலையை நிமிர்த்தி, கூட்டத்தைப் பார்த்த பெருமாளுக்கு ஆயாசமாக இருந்தது.

கூட்டத்தில் பக்கத்து வீட்டு மாயவரின் கை அசைந்து கூப்பிடுவது போல் தெரிந்தது.

"மாமா, பாட்டி செத்து போச்சி. அக்கா சொல்லி விட்டிச்சு. மதியம்..." அதுக்கு மேலே சொன்னது எதுவும் காதில் விழவில்லை பெருமாளுக்கு. கையை நீட்டி மைக்கை கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் பெருமாள்.

"ரெத்தத்த பாலாக்கி
எனை வளர்த்த தாயே – கடைசி
சத்தத்தை கேக்கலியே
நானொரு பெரும்பாவி...
சதையை பாலாக்கி
எனை வளர்த்த தாயே. ஒஞ்
சாவுக்கு நானில்லை
சனி புடிச்ச பெரும்பாவி..."

"என்ன ஓவரா தண்ணி போட்டுட்டானா? செத்தது ஆம்பளையா, பொம்பளையானு கூட தெரியாம ஒப்பு பாட்றானே." யார் யாரோ பேசிவிட்டுச் சென்றார்கள். இரண்டு கண்களிலும் வழிந்த கண்ணீர் ரோஸ் பவுடரை நனைத்து வேசத்தைக் கலைத்துச் சென்றது.

## 'பளபளா' சுவாமியின் 'கலகலா' பேச்சு!



நாரத கானசபாவில் 'விகடன் புகழ்' சுவாமி சுக போதானந்தாவின் சொற்பொழிவு. சுவாமிஜி காவிநிற பட்டு உடையில் பளபளா. அவரது ஆங்கிலச் சொற்பொழிவு கலகலா!

இந்திய ஆன்மீகம் - மேற்கத்திய நிர்வாகம் இரண்டு கருத்துக்களையும் இழைய விட்டுப் பேசினார். இடையிடையே நகைச்சுவைக்குப் பஞ்சமில்லை. சில பளிச்கள்:

கோபம்தான் உன் எதிரி. ஆனால் அது வெளியில் இல்லை. உனக்குள்ளேதான் இருக்கிறது. மற்றவர்கள் தம் செய்கைகளால், உன் கோபத்தை வாந்தி எடுக்கச் செய்கிறார்கள். கப் காலியாய் இருந்தால், கலக்கி என்ன பயன்? கோபம் உன் மனத்தில் இல்லை என்றால் யாரால் உன்னை என்ன செய்து கோபப்பட வைக்க முடியும்?

● மேற்கத்திய அறிஞர் ஒருவர், தான் குருவைத் தேடி, இறுதியில் அப்படி ஒரு நபர் கிடைக்கப் பெறாதது பற்றி, 'குரு வேட்டை' என்று ஒரு புத்தகம் எழுதினார். நான் அவருக்கு சொல்ல விரும்புவது இதுதான்: வேட்டையாடும் எண்ணத்துடன் போனால், உங்கள் முன்னால் தோன்ற எந்த குருவுக்கு தைரியம் வரும்?

● மனம் செம்மையடைய, வெறுமனே ஜபமாலை உருட்டிப் பயன் இல்லை. ருத்ராட்சம்தான் மிருதுவாகும்; மனம் கரடுமுரடாய்த்தான் இருக்கும்!

● புத்தரிடம் வந்த ஒருவர், 'உங்கள் கருத்துக்கள், என்னிடம் எந்தவித மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லையே?' என்று கேட்டபோது, அவர் பின்வருமாறு அவரிடம் பேசினார் :

''நீ உன் சொந்த ஊரிலிருந்து, நீ வேலை பார்க்கிற ஊருக்கு வருவது எப்படி என்று சொந்த ஊர்க்காரர்களுக்கு விளக்கிச் சொன்னது உண்டா?''

''சொல்லியிருக்கிறேனே! அவர்கள் அனைவருக்கும் வழி தெரியும்.''

''அவர்களுக்குத்தான் வழியை சொல்லிவிட்டாயே! அப்புறம் ஏன் அவர்கள், நீ வேலை பார்க்கிற ஊரில் இல்லாமல், சொந்த ஊரிலேயே இன்னும் இருக்கிறார்கள்?''

''வழியை நான் சொன்னாலும், அதன் அடிப்படையில் பயணம் செய்து, ஊரை அடைய வேண்டியது அவர்கள் வேலையல்லவா?''

''அதையேதான் நானும் சொல்கிறேன். நான் மோட்சத்துக்கு வழி என்ன என்று மட்டும்தான் உனக்குச் சொல்லித் தர முடியும். அதற்குரிய பயணத்தை மேற்கொள்ள வேண்டியது உன் கடமையல்லவா?''

— மௌஷ்மி

மூலம் : டேனியல் ஸ்டீல்

# 11:29

தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

கணவன் சொன்னதைக் கேட்டு அதிர்ச்சியினால் மூச்சடைத்து ஒரு நிமிடம் பேச்சிழந்து போனாள் பேஜ். என்ன ஆயிற்று இவருக்கு? ஏன் இப்படிப் பேசுகிறார்? எதுவும் புரியவில்லை..

"என்ன சொல்கிறீர்கள்? ஆலிஸன் செத்துப் போகட்டும் என்றா சொல்கிறீர்கள்?" என்று கத்தி விட்டாள்.

பிராட் நிதானம் இழக்கவில்லை. அமைதியான குரலில் பேசினான் : "ஆலிஸன் பிழைத்தெழுந்து உயிரோடு வரவேண்டுமென்றுதான் நான் சொல்கிறேன். பழைய ஆலியாக அவள் வர வேண்டும் என்கிறேன். இந்த விபத்து நேரிட்டிராவிட்டால் எப்படி இருந்திருப்பாளோ அப்படி வர வேண்டும் என்கிறேன். அழகானவளாக, பலசாலியாக, புத்திசாலியாக, தான் செய்ய விரும்பும் எந்தக் காரியத்தையும் தானே செய்து கொள்ளக் கூடியவளாக வரவேண்டும் என்கிறேன். நெஞ்சைத் தொட்டுச் சொல்லு. நடைப்பிணமாக அவள் உயிர் வாழட்டும் என்று உண்மையிலேயே நீ நினைக்கிறாயா? மூளை வளர்ச்சியில்லாத பெண்ணுக்கு ஆயுள் பூரா பணிவிடை செய்து கொண்டு இருக்கப் போகிறேன் என்று நிஜமாகத்தான் சொல்கிறாயா? அப்படிப்பட்ட நரக வேதனையோடு அவள் உயிர் வாழ வேண்டுமென்று நீ வேண்டுமானால் நினைக்கலாம். நான் நினைக்கவில்லை. அந்த மாதிரி அவள் இருப்பதைக் காட்டிலும் இப்போதே போய் விடட்டும் என்று நினைக்கிறேன். மூளையில் வீக்கம் ஏற்படுவதையும், ரெஸ்பிரேட்டர் மூலம் அவள் சுவாசிப்பதையும் பார்த்துக் கொண்டு பக்கத்திலேயே உட்கார்ந்திருப்பதால் நிலைமை கடுகத்தனையாவது மாறப் போகிறதா? இல்லை. நம்மால் செய்யக்கூடியதைச் செய்தாயிற்று. இனி நடப்பது நடக்கட்டும் என்று காத்திருக்க வேண்டியதுதான். இங்கே காத்திருந்தால் என்ன, ஆஸ்பத்திரியில் காத்திருந்தால் என்ன?"

நொறுங்கிப் போனாள் பேஜ், அவன் பேச்சைக் கேட்டு.

"ஆலி வேண்டாம். ஆண்டி? அவனும் உங்களுக்கு வேண்டாமா? உங்கள் காதலியுடன் கும்மாளம் போடுவதற்குச் சாக்காகக் கண்ணை மூடிக் கொண்டு, எதுவுமே நடக்காத மாதிரி பாசாங்கு செய்கிறீர்கள். குழந்தை ஆண்டியைப் பற்றி யோசித்தீர்களா? அக்கா சாகக் கிடக்கிறாள். அப்பா எங்கே இருக்கிறார், எப்போது வருவார் என்று தெரியாது. கண்முன்னால் பூகம்பம் நிகழ்வதைப் பார்த்துக் குலைநடுங்கிக் கொண்டிருக்கிறான் குழந்தை. தினம் தினம் பக்கத்து வீட்டில் போய்ப் படுத்துக் கொள்வதென்றால் அவனுக்கு எப்படி இருக்கும்! அதை நினைத்துப் பார்த்தீர்களா?"

"அவன் அப்படிப் பயப்படும் பட்சத்தில் நீ ராத்திரி வீட்டுக்கு வர வேண்டியதுதானே? ஏன் ஆஸ்பத்திரியில் இருக்கிறாய்?" என்றான் பிராடு இரக்கமில்லாமல்.

சரேலென்று எழுந்தவள், அவனை அடிக்கிறாற்போல் அவன் முன்னே வந்து நின்றாள்.

"இப்போது சொல்கிறேன், கேளுங்கள். ஆலி உயிருடன் இருக்கிற வரையில், அல்லது அவள் உயிர் பிரிகிற வரையில் நான் அவளை விட்டு வர மாட்டேன்!" என்றபோது அவள் கண்களில் நீர் முட்டித் தளும்பியது. ஆனால் அவள் குரலில் தடுமாற்றம் இருக்கவில்லை. "ஆலி பிறக்கும்போது அவள் கையைப் பிடித்துக் கொண்டிருந்தேன். அதே போல அவள் இந்த உலகத்தை விட்டுப் போகும்போதும் அவள் கையைப் பிடித்துக் கொண்டிருப்பேன். நீங்கள் ஆஸ்பத்திரிக்கு வந்தாலொழிய, அல்லது இங்கே ஆண்டியோடு இருந்தாலொழிய நான் வீட்டில் தங்கப் போவதில்லை. ஆனால் ஒன்று. எந்தக் கள்ளக் காதலனுடனும் கூத்தடித்துக் கொண்டிருக்க மாட்டேன்."

**'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்**

சொல்லிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பிராடைப் பார்க்கக் கூட அவளுக்குப் பிடிக்கவில்லை.

"பேஜ்..." என்று அவன் மெதுவே கூப்பிட்டான். அவன் குரல் கரகரத்திருந்ததைக் கேட்டு



21

அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை..." என்றபோது குற்ற உணர்வு அவனைப் பொசுக்குவது வெளிப்படையாகவே தெரிந்தது. "ஆலியை ஆஸ்பத்திரியில் பார்த்த பிறகு, அவள் பிழைத்து வந்து நடமாடுவாள் என்று எனக்குக் கொஞ்சமும் தோன்றவில்லை. வாழ்க்கை பூரா அவள் ஜடமாக, மரமாக இருப்பதை என்னால் பொறுக்க முடியாது. டாக்டர்கள் என்னென்னவோ சொல்கிறார்கள். கோமா என்கிறார்கள். மூளை பழுதாகி விட்டது என்கிறார்கள். புலன்கள் இயங்காது என்கிறார்கள். அவ்வளவையும் கேட்டுவிட்ட பிறகும் அவள் பிழைத்து நார்மலாக வருவாள் என்று எப்படி உன்னால் நம்ப முடிகிறது?"

"எனக்கு நம்பிக்கை இருக்கிறது. கடைசி வரையில் அவளுக்காகப் போராடத்தான் போகிறேன்."

"எனக்குப் பயமாயிருக்கிறது பேஜ்," என்று கூறி அவள் மார்பில் தலைசாய்த்து ஆறுதல் தேடினான் பிராட். "ஆலி இறந்து போகக் கூடாதென்றுதான் நான் ஆசைப்படுகிறேன். அதே சமயம் அவள் மரக்கட்டையாக இருப்பதையும் என்னால் சகிக்க முடியாது."

யதார்த்த நிலைமையைப் பார்க்கப் பயந்தான் அவன். ஓட்டம் பிடிக்கவே அவனுக்குத் தோன்றியது. அவன் காதலி ஸ்டிபானி அவனை அப்படி மாற்றியிருந்தாள். ஆலிஸனின் பக்கத்திலேயே உட்கார்ந்திருப்பதால் எந்தப் பயனும் ஏற்படாது என்று அவனை எண்ண வைத்தவள் அவள்தான். எப்படியும் பேஜ் சமாளித்துக் கொள்வாள் என்று சொல்லித் தந்தவளும் அவள்தான்.

எனினும், பேஜின் வேதனையைக் கண் முன்னே பார்த்தபோது அவன் மனம் இளகியது. குற்ற உணர்வு உறுத்தியது. அவள் இடுப்பை வளைத்து ஆதுரத்துடன் முத்தமிட முயன்றான்.

மறுவினாடியே, கசப்பினால் பேஜின் தேகம் விறைத்துக் கொண்டது. "லேட்டே வராதீர்கள். வெறுப்பாயிருக்கிறது," என்றாள் கடுமையாக. உண்மையாகவே அதைச் சொன்னாள். இவருக்குத்தான் ஸ்டிபானி இருக்கிறாளே? அதற்கு மேல் என்ன வேண்டும்? இவர் வேறொருத்திக்குச் சொந்தமாகி விட்டவர். அன்னியர். நமக்கும் இவருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை...

முரட்டுத்தனமாக முத்தமிட்ட அவனைப் பிடித்துத் தள்ளினாள். அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

சமையலறைக்குச் சென்று ஒரு காப்பி போட்டுக் கொள்ள முயன்ற சமயம் பிராட் பின்னாலே வந்து நின்றான். "ஸாரி பேஜ்... முட்டாள்தனமாக, உணர்ச்சிவசப்பட்டு நடந்து கொண்டு விட்டேன்..." என்றான்.

அவளுக்குக் கொஞ்சமும் மனம் இளகவில்லை. அவனைத் தொடவே அருவருப்பாக இருந்தது. ஒருவேளை ஸ்டிபானியின் தொடர்பைப் பற்றி அவன் வருந்தியிருப்பானானால், அந்த உறவை முறித்துக் கொள்கிறேன் என்று சொல்லியிருப்பானானால் பேஜுக்கு மனம் மாறியிருக்குமோ என்னவோ. ஆனால் அவனிடம் மனமாற்றத்துக்கான அறிகுறி இம்மியும் தென்படவில்லை. இன்னும் சொல்லப் போனால் பேஜின் உறவை முறித்துக் கொள்வதில்தான் அவன் அதிக நாட்டம் கொண்டிருப்பது போல் தோன்றியது. ஆஸ்பத்திரியில் ஆலிஸனின் நிலைமை பயங்கரமாக இருக்கிறதே என்பதோ, இங்கே ஆண்டி தனியாக இருக்கிறானே என்பதோ எதுவும் இவருக்குக் கவலையில்லை. ஸ்டிபானி... ஸ்டிபானி... ஸ்டிபானிதான் முக்கியம்!

"அவளுடைய டெலிபோன் நம்பரைக் கொடுங்கள். ஏதாவது அவசரமானால் உங்களைக் கூப்பிடச் சௌகரியமாயிருக்கும்," என்றாள் ஆத்திரத்துடன்.

"வந்து... அதற்குத் தேவையிருக்காது. இன்று ராத்திரி நான் இங்கே ஆண்டியுடன் இருப்பேன்."

"இருந்தால் இருங்கள், இல்லாவிட்டால் போங்கள். எனக்கு அக்கறையில்லை!" என்றாள் பேஜ். அவள் முகத்தில் கோபமும் அடிபட்ட காயமும், பிடிவாதமான உறுதியும் பளபளத்தன. அவள் நெருங்கி வருகிற மாதிரி தோன்றியதெல்லாம் ஒரு வினாடி நேரம்தான் என்பதைப் பிராட் உணர்ந்தான்.

"நிச்சயமாக நீங்கள் மாறப் போவதில்லை. அந்தப் பெண்ணின் நம்பரைக் கொடுங்கள் என்றால் கொடுத்து விட்டுப் போங்களேன்," என்றாள் அவள் மறுபடியும்.

"சரி. டெலிபோன் நோட்டில் குறித்து வைக்கிறேன்."

அவள் மௌனமாகக் காப்பியை உறிஞ்சினாள்.

"இன்றைக்கு எங்கே போகப் போகிறாய்?" என்று பிராட் கேட்டான். மீண்டும் ஆஸ்பத்திரிக்குத்தான் அவள் செல்லப் போகிறாள் என்று அவன் நினைத்திருந்தான். எனவே அவள் பதில் ஆச்சரியம் தந்தது.

"அந்தப் பையன் பிலிப்பின் சவ அடக்கம் இன்று நடக்கிறது. அதற்குப் போகப் போகிறேன். நீங்கள் வருகிறீர்களா?"

"நானா! நிச்சயமாய் வர மாட்டேன். அந்த அயோக்கிய ராஸ்கலால்தான் என் பெண் சாகக் கிடக்கிறாள். எப்படித்தான் உனக்கு அங்கே போக மனம் வருகிறதோ! சே!" என்று

சிறினான் பிராட்.

"அவன் அவர்களுக்கு ஒரே பிள்ளை. விபத்துக்குக் காரணம் அவன்தான் என்பதும் இன்னும் முடிவாகவில்லை. அப்படியிருக்க, போக மாட்டேன் என்று சொல்வது என்ன நியாயம்?"

"எனக்கு அந்தப் பையனிடம் துளியும் இரக்கம் ஏற்படவில்லை. ரத்தப் பரிசோதனையில் அவன் குடித்திருந்தான் என்று வேறே தெரிந்திருக்கிறது. அப்புறம் என்ன?"

"ஆனால் போதையில் இருக்கும் அளவுக்கு அவன் குடித்திருக்கவில்லை," என்று மறுத்துப் பேசினான் பேஜ். "சரி, அந்தப் பெண் பிள்ளை? மறு காரை ஓட்டி வந்த அவள் மீதும் தப்பு இருக்கலாமில்லையா?"

"லாரா ஹட்சின்ஸ் ஒரு செனெட்டரின் மனைவி. மூன்று குழந்தை பெற்றவள். போதை தலைக்கேறும் அளவுக்குக் குடித்துவிட்டுக்




[illegible] கார் ஓட்டுவாளா."

"அதெப்படி நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?"

"நிச்சயமாய் எனக்குத் தோன்றுவதால் சொல்கிறேன். போலீசிலும் அவள் மேல் தப்பில்லை என்றுதான் நினைக்கிறார்கள். அதனால்தான் அவளிடம் ரத்தப் பரிசோதனை எடுக்கவில்லை."

"செனெட்டரின் பெண்டாட்டி என்பதால் விட்டு விட்டார்கள்," என்றான் பேஜ். அவன் இப்படிப் பிடிவாதமாகப் பேசுவது அவளுக்கு வெறுப்பாக இருந்தது. வேண்டுமென்றே அவன் வாக்குவாதம் பண்ணுகிறான் என்று புரிந்ததால், "எப்படியும் நான் பிலிப்பின் சவ அடக்கத்துக்குப் போகிறேன். நீங்கள் வராவிட்டால் பரவாயில்லை. இரண்டே கால் மணிக்கு வந்து என்னை அழைத்துப் போவதாகத் தாரென்ஸன் சொல்லியிருக்கிறார்," என்றாள்.

பிராடின் புருவங்கள் உயர்ந்தன. "ஓ! குஷியான ஏற்பாடுதான்!" என்று கேலி செய்தான்.

"மூடுங்கள் வாயை!" உடலில் ஏற்பட்டிருந்த களைப்பும் மனத்தில் ஏற்பட்டிருந்த கோபமும் சேர, கண்ணாலேயே அவனை எரித்து விடுகிற மாதிரி முறைத்தாள். "ஆஸ்பத்திரி என்றால் உங்களுக்குக் குமட்டுகிறது. தாரென்ஸனுக்கு அப்படியில்லை. மூன்று நாளாக எனக்குத் துணையாக ஆஸ்பத்திரியில் தங்கிக் கொண்டிருக்கிறார். அவர் பெண் க்ளோவும்தான் பிலிப் ஓட்டிய காரில் இருந்தாள். அவளுக்கும்தான் பயங்கரமான காயம். ஆனால் தாரென்ஸனுக்கு அல்ப புத்தி கிடையாது. பிலிப்பின் அப்பா அம்மாவுக்கு அனுதாபம் தெரிவிக்க வேண்டும் என்ற பெருந்தன்மை இருக்கிறது."

"ஆகாகா! பிரமாதமான மனிதன்தான் தாரென்ஸன்!" என்று மேலும் கேலி செய்தான் பிராட். "இனிமேல் நீங்கள் இரண்டு பேரும் நெருங்கிய சினேகிதர்களாக இருக்கலாம். நான்தான் உனக்கு வேண்டாதவனாக ஆகிவிட்டேனே!"

தாரென்ஸனைப் புகழ்ந்து சொன்னது அவனுக்கு எரிச்சல் ஏற்படுத்துகிறது என்பதைப் பேஜ் புரிந்து கொண்டாள். ஆனால் அதற்காகத் தான் நினைப்பதை மறைக்க விரும்பவில்லை.

"நீங்கள் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் தாரென்ஸன் பிரமாதமான ஆள்தான். அருமையான சினேகிதர். ஆலிக்கு விபத்து நேர்ந்த அன்று இரவு, நீங்கள் உங்கள் திருட்டுக் காதலியுடன் கூத்தடிக்க எங்கேயோ சுற்றிக் கொண்டிருந்த சமயம், எனக்குத் துணையாக இருந்தவர் அவர்தான். இரவு முழுவதும் என் கையைப் பிடித்துக் கொண்டு தைரியம் சொன்னவர் அவர்தான். இன்னொன்றும் சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள். உங்களைப் போலப் பெண் பித்துப் பிடித்து அலைகிறவரல்ல அவர். தன் குழந்தைகளைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் அவருக்கு அக்கறை கிடையாது. என்னை ஒரு பெண் என்கிற முறையில் அவர் பார்க்கவில்லை. சினேகிதியாகப் பார்க்கிறார். நானும் அவரை ஒரு சினேகிதராகத்தான் நினைத்துப் பழகுகிறேன். கணவன்தான் எனக்கு இல்லையென்று ஆகி விட்டது. ஒரு நல்ல சினேகிதராவது இருக்கட்டுமே?"

படபடவென்று அவள் வெடித்ததைப் பார்த்து ஒரு நிமிடம் சிலையாக நின்றான் பிராட். பிறகு மடேலென்று கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறினான்.

(தொடரும்)

# மஞ்சள் பலகையில்

**எஸ்.ஐ.ஆர்.**

ஊர் எல்லை பெட்ரோல் பங்க். அடிக்கடி திருட்டு நடந்து செய்தியில் அடிபட்டுக் கொண்டிருந்தது. உரிமையாளர் சுதர்ஸனம் விற்றுவிடத் தீர்மானித்தார். விழுப்புரம் எண்ணெய்க் கடை நாடார்தான் துணிச்சலுடன் வாங்க முன்வந்தார். ஆளைப் போட்டு கவனிக்கச் செய்ய வேண்டும். தேடியபோது அகப்பட்டவன் ரவீந்திரன்.

“ரவி தம்பி... பொறுப்பு உன்னுது. வியாபாரம் பாட்டுக்குத் தானா நடக்கும். விளக்கெண்ணெய், நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய்லாம் விட இந்த எண்ணெய்க்கு டிமாண்டு. ஊரப்பாக்கம் வரச்சே கண்ல படற முதல் பங்கு வேற... ஆனால், இந்தத் திருட்டு இமேஜை உடைக்கணும்! நீ என்ன பண்ணுவியோ ஏது பண்ணுவியோ எனக்குத் தெரியாது. வேணாதை செலவழிச்சுக்கோ.... திருட வர்ற இடம்ங்கறதை மட்டும் மாத்து...”

ரவீந்திரன் மூன்று பகல் இரண்டு இரவு தலையைப் பிய்த்துக் கொண்டான். காவலுக்கு இரண்டு ஆட்கள் இருக்கிறார்கள்; நம்பகமானவர்கள். தினம் தினம் வசூலை வங்கியில் கட்டியாகி விடுகிறது. ஆனாலும் மாலை ஐந்து மணி முதல் மறுநாள் காலை பாங்க் திறக்கிற ஒன்பது மணி வரை சேரும் பணத்தை என்ன செய்ய...? ஹைவே என்பதால் இரவெல்லாம் டீசலும் பெட்ரோலும் அடித்துச் சேரும் தொகை அதிகம். வழக்கமான போலீஸ் ரோந்துகளையும் மீறி ஆறு மாதத்தில் மூன்று திருட்டு நடந்திருக்கிறது.

‘ரகசிய பாதுகாப்புப் பெட்டகம் கட்டலாமா...?’ – யோசனையை வெளியிட்டபோது மனைவி ராதிகா ‘வீட்டோ’ செய்தாள்.

“திருட வர்றவன் நீங்க எங்க வச்சாலும் கண்டு பிடிச்சு வாங்க... உங்களுக்கு ஒளிக்கறதே குறின்னா அவனுக்குத் திருடறதே குறி...”

“நீ சொல்றதைப் பார்த்தா திருடனுக்காகக் காத்திருந்து வலைவீசித்தான் பிடிச்சுக்கிடணும் போலிருக்கே....”

“பேசாம எழுதி வைங்க... ‘இங்கே திருடுபவர்களைக் கடவுள் தண்டிப்பார்!’ அப்படின்னு கொட்டையா எழுதி வைங்க. ‘வஸந்தா பவனில் திருடியது’ அப்படின்னு ஹோட்டல் பாத்திரத்துல எழுதி வைக்கறாப் போல...”

– மிகவும் நக்கலாகத்தான் சொன்னாள் ராதிகா...

முதலாளி பெரிசாகச் சிரித்தார். ‘இங்கே கடவுள் காவலிருக்கிறார்.... அவர் கண்ணயர்வதே இல்லை...’ நிதானமாக உரக்கப் படித்துவிட்டு மீண்டும் விழுந்து விழுந்து சிரித்தார்.

‘பிழைக்கத் தெரியாதவன்’, ‘பேமானி’ ‘ஏமாளி’ – இன்னும் என்னவெல்லாமோ அதில் தெறித்தது. ரவீந்திரன் கசப்பை விழுங்கி ஐம்பதுக்கு நாற்பது அறிவிப்புப் பலகையைப் பார்த்தான். மஞ்சள் பின்னணியில் சிவப்பு எழுத்துக்கள் – அவனுக்குப் பிடித்திருந்தது. இரவிலும் பளிச்சென்று தெரியும்படி மெர்க்குரி விளக்கொளி ஏற்பாடு செய்திருந்தான்.

“இவ்வளவு தூரம் செஞ்சிருக்கியே... ஏதானும் பலனிருந்தால் சரி. நான் செலவழிச்சிட்டியேன்னு சொல்லலை... இவ்வளவு நம்பிக்கை வைச்சிருக்கியேன்னு சொல்றேன்... இதைப் படிச்சுட்டு எவன் மனசு மாறப் போறான்...?”

ரவீந்திரனுக்கு அந்த மன மாற்றப் புள்ளி விவரம் எடுக்கும் வாய்ப்பெல்லாம் கிடைக்கவில்லை. அடுத்த மாதமே திருச்சியில் புது ஹோட்டலில் மானேஜர் வேலை கிடைக்க, நாடாரிடம் விடைபெற்றுப் போனான். அங்கிருந்து சேலம் சுகபோகம், ஏர்காடு கூல்டாப், கொடைக்கானல் வாலி க்ரீன் என்று ஒரு பெரிய வட்டம் அடித்து பதினேழு ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் திருச்சி. அதே சங்கீதா ஹோட்டலில் அதே மானேஜர் பொறுப்பு... சங்கீதாவுக்கு மட்டும் பிரமோஷன் கிடைத்திருந்தது! – இப்போது த்ரீ ஸ்டார் ஹோட்டல். கல்லா பெட்டிக்குப் பதில் கம்ப்யூட்டர். ஏஸி செய்த லாபி. கண்ணாடிக் கதவுகள்.

# இங்கே கடவுள் காவலிருக்கிறார்... அவர் கண்ணயர்வதே இல்லை!

## சிவப்பு எழுத்துக்கள்!

திருச்சியில் மீண்டும் குடித்தனம் போட ரொம்ப உதவியவன் சிந்தாமணிதான். சங்கீதாவின் லாபி மானேஜர்.

"என்னண்ணே... வீட்ல திருப்தியாருக்காங்களா...? பசங்களுக்கு ஸ்கூல் பிடிச்சுப் போச்சுதா...?" – ஒரு சீனியருக்கு உதவுகிறோம் என்கிற குழைவோ, பணிவோ இல்லாமல் நட்புணர்வோடு விசாரித்தான் சிந்தாமணி.

"ரொம்ப தாங்க்ஸ் சிந்தாமணி... எல்லாம் கச்சிதமா இருக்கு..."

சிந்தாமணி தலையைத் தூக்காமல் நோட்டுகளை எண்ணிக் கொண்டிருந்தான். அன்று நான்கு ரூம்கள் காலியாகியிருந்தன. கலெக்ஷன் அதிகம். எல்லாம் நூறு ரூபாய் நோட்டுகள்.

"ரொம்ப பொறுப்பான வேலை சிந்தா, உன்னுது.. டெபாஸிட் வாங்கறது; அட்ஜஸ்ட் பண்றது; கலெக்ஷன், கணக்கு... எல்லாம் கரெக்டா மெயின்டெய்ன் பண்றே..."

"என்ன பிரமாதம்! கம்ப்யூட்டர் பாதி வேலை செஞ்சுடுதே..." என்றவன் ஒரு நூறு ரூபாய் பண்டலை ரப்பர் பேண்ட் போட்டுக் கட்டிவிட்டு நிமிர்ந்தான். அவன் கண்களில் ஏன் இலேசான நீர்ப் படலம்...?



"உங்களுக்கென்ன... தெரிஞ்சா அதிசயப் படுவீங்க..."

"என்ன...?"

"ஒரு காலத்துல நான் வேற 'தொழில்' பண்ணிக் கிட்டிருந்தேன்..."

"என்ன...?"

"இதோ – இப்படி யாரானும் எண்ணிக் கட்டி வைச்சா அதை அடிச்சுட்டு வந்துட வேண்டியது...."

'விளையாடறியா?' என்பது போல் பார்த்தான் ரவீந்திரன்.

"விளையாடல... ஜீவனைல் ஹோம்ல கூட இருந்திருக்கேன்... அங்கேயிருந்து வெளில வந்ததுமே திரும்பவும் 'தொழிலுக்கு'ப் போயிருப்பேன்... அப்படிப் போக விடாம தடுத்தது ஒரு பெட்ரோல் பங்க்னா நம்புவீங்களா...?"

ரவீந்திரனுக்கு மூச்சு நின்றுவிடும் போலிருந்தது.... எத்தனை ஆயிரம் முறை அதை நினைத்துப் பார்த்திருப்பான்... அந்த மஞ்சள் பின்னணியில் சிவப்பு எழுத்துக்கள் – அவை வெறும் எழுத்துக்களாகவே காலம் கழித்தனவா... அல்லது உயிர் பெற்றனவா...? என்ற விடை தெரியாத கேள்விக்கு இப்போது...

"எந்த பெட்ரோல் பங்க் சிந்தாமணி...?" – கேட்கும்போதே அவன் குரல் வெடவெடத்தது.

"விழுப்புரம் – அங்க ஊர்க் கடைசிலே ஒரு பங்க் – திருடப் போனேன். 'இங்கே கடவுள் காவலிருக்கிறார்.... அவர் கண்ணயர்வதே இல்லை'ன்னு எழுதி வைச்சிருந்தாங்க... அன்னிக்கு விட்டதுதான் அந்தத் 'தொழிலை'... நான் சும்மனா சொல்லலை... இப்பவும் நினைவிருக்கு மஞ்சள் பலகையில சிவப்பு எழுத்து அண்ணாச்சி..."

ரவீந்திரன் சிந்தாமணியின் இருக்கையில் உட்கார்ந்து ஆனந்தமாக அழுதான்.

# நடக்குமென்பார், நடக்கும்!

## மேஷம்:

அம்மாடியோவ்! ரெண்டு வாரமா ஐக்கிய முன்னணி மாதிரி என்னா குழப்பம் உங்க லைஃப்புல! ஏறுக்கு மாறாவே சமாசாரங்களெல்லாம் நடந்துச்சி, இல்லியா? தீர்ந்தது சார், பிரச்னையெல்லாம்! இந்த வாரம் சும்மா ஸ்வீப்பிங் மெஜாரிட்டி கிடைச்ச கட்சியாட்டமா புகுந்து விளையாடப் போறீங்க! அட்சய பாத்திரம் மாதிரி, பாக்கெட்டுலேருந்து பணம் சுரந்துக்கிட்டே இருக்கும். எப்படின்னெல்லாம் கேக்காதீங்க. பல வழிகள்ல பணம் வந்து சேரப் போவுது. உத்தியோக ரீதியிலும் நல்ல திருப்பங்கள் தெரியுது. சிலருக்கு ப்ரொமோஷன் சான்ஸ் அடிக்கும். பெண்களுக்கு ஆடைகள் வாங்கற யோகம் இருக்குது. ரொம்ப நாளா திரை கடலோட ஆசைப் படறவங்களுக்கு இப்ப அதுக்கான சான்ஸ் வந்தா ஆச்சர்யப் படறதுக்கில்லை.

## ரிஷபம்:

அலைச்சல் ராசி சார் உங்களுக்கு. மாங்கு மாங்குன்னு அலைஞ்சி, உடம்பைக் கெடுத்துப்பீங்க. அது போறாதுன்னு பணம் வேற ஐஸ்கட்டியாட்டம் கரையும். கொஞ்சம் லகானை டைட்டா புடிக்கப்பாருங்க. ஆனா, வெள்ளிக் கிழமைக்கப்புறம் கிரக நிலைமை கொஞ்சம் மாறி, நேர் நிலைக்கு வராப்பல வந்துருவீங்க. ஆனா பிரயாணங்களைத் தவிர்க்க முடியாது. குறிப்பா ஒண்ணாந்தேதி. அன்னிக்கு ஃபினைட்டுல போற பிளான் யாருக்காச்சும் இருந்திச்சின்னா, அதிக பட்சம் அவாய்ட் பண்ண முயற்சி பண்ணுங்க.

## மிதுனம்:

இந்த குருங்கறவர் இருக்காரே, அவர் கொஞ்சம் கோவிச்சுக்கிட்டு, மூஞ்சியைத் தூக்கி வெச்சிட்டாருன்னா பிராப்ளம்தான் எப்பவும். பக்குவமா தாஜா பண்ணி வெக்கணும். ஆனாலும் பாருங்க, இந்த வாரம் உங்களுக்கு குரு சஞ்சாரம் சரியா இல்லைன்னாலும் மத்த கிரகங்களெல்லாம் கூட்டணி அமைச்சி, சப்போர்ட் பண்ணத் தயாரா எழுந்து நிக்கறாங்க. இதனால என்ன ஆவும்னா, எந்தக் காரியமும் ஸ்டார்டிங் ட்ரபிள் இருந்தாலும் ஃபைனலா சுமுகமா ஓர்க் அவுட் ஆயிடும்- ஸ்ரீலங்காவோட நடந்த மேட்சுல ஜடேஜா செஞ்சுரி போட்டாப்பல. ஆபீஸ் போறவங்களுக்குக் கொஞ்சம் வினோதமான கஷ்டங்கள் வரும். என்னன்னா, உங்களை ஆஹா, ஓஹோன்னு புகழ்ந்து ஐஸ் வெச்சி, மத்தவங்க, அவங்கவங்க வேலைகளையெல்லாம் உங்க தலைல கட்டிருவாங்க. பேக்கு மாதிரி, இழுத்துப் போட்டுட்டு செய்வீங்க. ஸோ? களைப்பு, அலுப்பு- இந்த வாரம் மூச்சூடும் இப்படித்தான்.

## கடகம்:

வீடு கலகலப்பா இருக்குங்க. அதாவது, சம்சாரம் பாத்திரங்களைப் போட்டு உருட்டு வாங்க. காரணம், சகட்டு மேனிக்கு செலவு. மனஸ்தாபம். குறிப்பா, 30,31 ஒண்ணாம்தேதி படு சாக்கிரதையா இருந்துக்கிடுங்க. ஒண்ணும் சரியில்லை. பிரச்னை எந்த விதத்துல வரும்னே சொல்ல முடியாத சூழ்நிலை. நண்பர்கள் கூடப்ருட்டஸ் வேலை பண்ணலாம். போறாத குறைக்கு வயிற்று உபாதைகள் எட்டிப் பார்க்கும். வேற வழியே இல்லை. பிள்ளையாரை கெட்டியா புடிச்சிக்கங்க.

## சிம்மம்:

என்னங்க, எப்பப் பார்த்தாலும் போனால் போகட்டும் போடான்னு பாடிட்டே இருந்தா எப்படி? விரக்தி ஒரு கட்டுக்குள்ள இருக்கணும் சாமி. பாருங்க இந்த வாரம் பூரா நீங்க சரியா இருக்கப் போறதில்லை



மொத ரெண்டு நாள் பரபரப்பா இயங்க ட்ரை பண்ணுவீங்க. வெள்ளிக்கிழமைலேருந்து சோர்ந்துடுவீங்க. விளைவு: சிக்னல் கிடைக்காத ரயில் மாதிரி காரியங்கள்லாம் பாதில நிக்கும். வீடு மாற வேண்டி வரலாம்- சிலருக்கு. (வேறென்ன? வீட்டுக்காரர் உபத்திரவத்தால தான்!) புதுசா எதாவது பெரிய பிளான் வெச்சிருந்தீங்கன்னா, ஐ.மு. வழிகாட்டும் குழுக் கூட்ட முடிவுகள் மாதிரி தள்ளி வெச்சிடுங்க.

## கன்னி:

இந்த வாய் இருக்குதுங்களே, அது படுத்தறபாடு கொஞ்ச நஞ்சம் இல்லைங்க. குறிப்பா இந்த வாரம்- இந்த

ராசிக்காரங்களை! பேசிப் பேசியே வாங்கிக் கட்டிக்கப் போறாங்க. ஆனா, குரு பார்வை பிரமாதமா இருக்கறதால, எடுத்த காரியத்தை முடிக்காம விடமாட்டாங்க. உடம்பு கொஞ்சம் படுத்தலாம். பர்டிகுலரா, பி.பி. இருக்கறவங்களுக்கு. சைலண்டா இருங்க. பேசிப் பேசி பிரச்னைகளை இழுத்து உட்டுக்காதீங்க. நம்ம முன்னாள் பிரதமரை மனசுல நினைச்சிக்குங்க. அவரைப் போலவே 'ராவ'ணான்னு கிடந்தீங்கன்னா நோ பிராப்ளம்!



## துலாம்:

நல்ல காலம் பொறந்துருச்சி நைனா. மனசுல உற்சாகம் பொங்குமே? அதான்! நேரம் வந்தா கூடி வரும்னு சும்மாவா சொன்னாங்க? பேரு, புகழ், பணம் எல்லாம் ஒண்ணா வரப் போவுது. இரும்பு சம்பந்தமான வியாபாரம், கம்ப்யூட்டர் துறைல இருக்கறவங்களுக்கு ரொம்பப் பிரகாசமா இருக்குது. குட் லக்.

## தனுசு:

உங்க கேரக்டரே ஒரு கவர்ச்சியா இருக்குது சார். எதுக்கும் யாருக்கும் வளைஞ்சு குடுக்க மாட்டீங்க. ஆனா, அன்பா ரிக்வெஸ்ட் பண்ணா, அடுப்புல வெச்ச வெண்ணெயாட்டமா உருகிடுவீங்க! இந்த வாரம் பாருங்க, உத்தியோக ரீதியில நல்ல பலன்கள் தெரியுது. அரியர்ஸ் எதனா இருக்குமே? (பசங்களுக்கு சொல்லலை!) அந்த அமவுண்ட் இப்ப வந்து சேர்ந்துடும். பிறகு சிலருக்கு டும்டும் ஃபிக்ஸ் ஆவலாம். (வர்ற பொண்ணு, பார்க்க சூப்பரா இருப்பா.) வயசானவங்க மூட்டையைக் கட்டிக்கிட்டு க்ஷேத்ராடனம் கிளம்ப நினைச்சிருந்தா இந்த வாரம் அதுக்கு சரியா இருக்கும். பசங்களைப் பொறுத்த வரைக்கும் ஜாலியான வாரம்.

## மகரம்:

எம்.ஜி.ஆர். படத்து நம்பியார், வீரப்பா மாதிரி இந்த வாரம் உங்களுக்கு வில்லன்கள் தொந்தரவு ஜாஸ்தி. நீங்க எதைத் தொடங்கினாலும் எதாவது எதிர்ப்பு வந்துட்டே இருக்கும். பயந்துராதீங்க. கொஞ்சம் நிதானமா நபர்களோட பழகுங்க. எதை செய்யறதா இருந்தாலும் ரகசியமா ஆரம்பிங்க. அப்புறம்... பாங்க் தவிர இந்த வாரம் வெளி இடங்கள் எதிலும் இன்வெஸ்மென்ட் வேணாம். போணி ஆவாது. எதுக்கும் டெய்லி ஆஞ்சநேயரை ஒரு ரவுண்ட் கும்பிட்டுட்டே வாங்க. நல்லது.

## விருச்சிகம்:

உங்களுக்கு வர்ற பெரும்பாலான பிரச்னைகளுக்கு உங்களோட டென்ஷன்தான் காரணம்னு ஏன் புரிஞ்சிக்க மாட்டேங்கறீங்க? சாந்தமா இருக்க ட்ரை பண்ணுங்க சாமி. பாருங்க, இந்த வாரம் கல்யாணத்துக்கு மொய் எழுதியே காசு கரையும். உடனே 'ஐயோ இப்படி செலவாவுதே'ன்னு அடிச்சிக்கினா எப்படி? ஆகறது ஆயிட்டேதான் இருக்கும். கண்டுக்காம இருங்க. அடுத்த வாரம் சரியாயிடும். அப்பால, மேலதிகாரிகளால சிலருக்குச் சில பிரச்னைகள் வரலாம். பார்த்து நடந்துக்கங்க. வேலை பளு ஜாஸ்தியா இருக்கும். ஒரே ஆறுதல், பசங்க மூலமா எதனாச்சும் நல்லது நடக்கலாம்!

## கும்பம்:

உங்களுக்கு ராகு-கேது ரெண்டும் கொஞ்சம் சேஞ்ச் ஆயிருக்குது. அதாவது இடமாறுதல். இதனால என்ன ஆவும்னா, கொஞ்சம் குடும்பக் குழப்பம், பணக்கஷ்டம் இருக்கும். புருஷன்-பெண்சாதி நடுவுல கொஞ்சம் ஊடல் இருக்கும். பின்னால சரியாப்பூடும்னு வெச்சிக்கங்க. எதுக்கும் ஒரு நடை காளஹஸ்தி போய் வந்தா கொஞ்சம் ரிலீஃப் கிடைக்கும். ஆனா தசாபுத்தி நல்லா இருக்கறவங்களுக்கு இந்த சில்லறைப் பிடுங்கல்கள் இருக்காது.

## மீனம்:

பத்து படம் தியேட்டர்ல ரிலீஸ் ஆகி, அதுல ஒண்ணு ரஜினி படமா இருந்தா எதனோட ஆதிக்கம் ஜாஸ்தியா இருக்கும்? அதே போலத்தான்! எத்தனை கிரகங்கள் இருந்தாலும் உங்களுக்கு இப்ப சனி பகவானோட டாமினேஷன் கொஞ்சம் அதிகம். விளைவு என்னன்னா நீங்க திட்டம் போட்டாப்பல எதுவும் நடக்காது. அது ஒண்ணுதான் குறையே தவிர மத்த விஷயங்கள் சூப்பரா நடக்கும். குறிப்பா, பண வரவு நல்லா இருக்கும். புதுப்புது ஃப்ரெண்ட்ஸ் கிடைப்பாங்க. விளையாட்டு வீரர்களுக்கு செம யோகம்! வியாபாரத்துல இருந்தா, வளர்ச்சி இருக்கும். ஒரே சமாசாரம். பிரயாணங்களை இந்த வாரம் அவாய்ட் பண்ணிடுங்க. அதனால சில சிக்கல்களைத் தவிர்க்கலாம்!

21

# குறையொன்றுமில்

ரத சப்தமி, பீஷ்மாஷ்டமி போன்ற காலங்களில் பித்ரு தேவதைகளை ஆராதிப்பது உண்டு. இதிலே பீஷ்மாஷ்டமி விசேஷமாக அமைகிறது. அந்த அஷ்டமியிலே ஒருத்தர் பித்ரு காரியம் பண்ணினால் பெரும் பலன் அடையலாம்.

அன்றைய தினம் அவர் முன்னோர் திதியுமில்லை, மாச முமில்லை... இருந்தாலும் பித்ரு தேவதைகளை அன்றைய தினம் ஆராதிப்பதனால் வரக்கூடிய பலன்களைச் சொல்லி முடியாது!

அப்படி ஆராதிப்பவரின் வம்சத்திலே கூன், குருடு, செவிடு முதலான அங்கஹீனர்களாகக் குழந்தைகள் பிறந்திருந்தால் அவர்களுக்கெல்லாம் நல்ல வாழ்வு அமையும். அந்த மாதிரி பிறவியேற்படக்கூடிய ஒரு நிலையிருந்தால் அதெல்லாம் நீங்கும். பித்ரு லோகத்திலில்லாமல் வேறு நரகாதிகளில் எல்லாம் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கக்கூடியவர்கள் இருந்தால், அத்தகைய நம் முன்னோர்களுக்கு உயர்ந்த உலகம் கிடைக்கும்.

அப்படிப்பட்ட ஏற்றமுடையது பீஷ்மாஷ்டமி. அன்றைய தினம் விசேஷமாக தில தர்ப்பணம் பண்ணலாம். அதற்கு முடியவில்லையென்றால், ஒரு பிடி எள்ளை தானம் பண்ணலாம். அதுவும் முடியவில்லையானால் கொஞ்சம் எள்ளை ஒற்றிக்கொண்டு தீர்த்தத்தைக் கீழே விடலாம். அதுவும் முடியவில்லையென்றால் பசுவை பிரதக்ஷிணம் பண்ணி சேவிக்கலாம். அதுவும் முடியலை என்றால் மனையை விட்டு வெளியிலே போய் கழனிக் காட்டிலே நின்றுகொண்டு உயரே இரண்டு கைகளையும் தூக்கி, "இன்றைய தினம் பீஷ்மாஷ்டமி... பித்ரு தேவதைகளை ஆராதிக்க வேண்டும் என்று நினைக்கிறேன்; ஆனால் முடியலை... பித்ரு தேவதைகளே நீங்களெல்லாம் திருப்தியாக இருக்க வேண்டும்...." என்று வேண்டிக் கொள்ளலாம்.

அதுவும் முடியவில்லையானால்....?

அதுவும் முடியவில்லையானால் வேறெதுவும் சொல்வதற்கில்லை! 'ஒரு காரியத்தைச் செய்ய முடியவில்லை...' என்று சொல்வதற்குக் கூடவா முடியாது! சாஸ்திரமானால் 'செய்' என்று சொல்லித் தருகிறது. செய்ய முடியவில்லையானால் என்ன மாற்று என்றும் சொல்கிறது - ஒன்றுமே முடியாவிட்டால் அதையாவது சொல்லேன் என்கிறது!

பீஷ்மாச்சார்யார், அந்திம காலத்திலே வழங்கியதைக் கேட்க பரமாத்மாவே வந்து பிரத்யக்ஷமாக சேவை தருகிறான். அவனை உடனடியாக பீஷ்ம ஸ்துதியாலே சேவித்து, உன் திருவடியில் என்றும் அசஞ்சல பக்தியுடன் இருக்க ஆத்ம சமர்ப்பணம் செய்கிறேன் என்கிறார்.

இதனால், அந்திம காலத்தில்தான் பீஷ்மஸ்துதியை நாம் சொல்ல வேண்டும் என்பது கிடையாது.

"இப்பவே எதற்கு பீஷ்ம ஸ்துதியைச் சொல்வதாம்...?" என்றார் ஒருவர்.

அடுத்த க்ஷணம் என்ன என்பது நமக்குத் தெரியுமா...?

ஒவ்வொரு க்ஷணமும் நமக்கு அந்திம காலமாக இருக்கக்கூடியதுதான். அதனால் பீஷ்ம ஸ்துதியை எப்போதுமே சொல்லலாம். பித்ரு தேவதைகளை ஆராதிக்கலாம்.

பித்ரு தேவதாராதனம் என்பது வீணான காரியமில்லை... அது விஷ்ணுவினுடைய ஆராதனம். பித்ரு காரியத்தினால் ஆராதிக்கப்படும் அவன் சந்துஷ்டி அடைகிறான்.

இவ்வாறு, கர்ம காண்டத்தில் யக்ஞப் பிரவரணத்தில் போய்ப் பார்த்தாலும், பிரும்ம காண்டத்தில் போய்ப் பார்த்தாலும், ஞான காண்டத்தில் போய்ப் பார்த்தாலும், உபநிஷத்தில் பார்த்தாலும், இதைப் போன்ற பித்ரு காரிய மந்திரங்களிலே பார்த்தாலும் சரி... விசேஷமாக ஆராதிக்கப்படுகிறவன் விஷ்ணுதான். அப்படிப்பட்ட விஷ்ணுவை தியானம் பண்ணு... என்றுதான் சொல்லியிருக்கிறது.

காயத்ரி என்கிற சப்தத்தின் பெருமையைச் சொன்னேன்.

காயத்ரி என்பது ஒரு சந்தஸ். அனுஷ்டுப்

# 26

நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி
தன்னோ விஷ்ணு ப்ரசோதயாது

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாசார்யார்

லை





# அருள்வாக்கு

'Darkness at Noon' என்ற ரொம்பவும் controversial ஆன (சர்ச்சைக் கிடமான) புத்தகம் எழுதின ஒரு வெள்ளைக்காரர் (ஆர்தர் கீஸ்லர்) என்னிடம், 'உங்கள் கோயில்களில் என்ன இப்படி ஒரே சத்தமும் கூச்சலுமாயிருக்கே?" என்று கேட்ட போது நான் சொன்னேன். "சர்ச்சில், மசூதியில், புத்தவிஹாரத்தில் silent prayer செய்கிறதுபோலக் கோயிலில் செய்யணும் என்பது முக்ய உத்தேசமில்லை; எங்களுக்கு ஏகாந்தத்தில் த்யானம்தான் முக்யம். த்யானம், congregational worship' (கூடிப் பிரார்த்தனை சொல்லி வழிபடுவது) ஆகியவற்றிற்காகக் கோயில் இல்லை. ராஜா நம்மை ரக்ஷிக்கிறான் என்பதற்காக அவனுக்கு அரண்மனை, அலங்காரம், பரிவாரம், படாடோபம் எல்லாம் கொடுக்கிறோம்; வரியும் கொடுக்கிறோம் அல்லவா? அதே மாதிரி ஸர்வலோக ராஜாவாக, ஸர்வ கால ரக்ஷகனாக இருக்கப்பட்ட பகவானுக்குப் பொன்னையும் பூஷணத்தையும் கொடுத்து பெரிசாகக் கோயில் கட்டிவைத்து, மேள தாள விமரிசைகளோடு உத்ஸவம் செய்யவே, Community thanksgiving ஆக (ஸமூஹ நன்றியறிவிப்பாக) collective offering ஆக (கூடிக் காணிக்கை செலுத்துவதாக) எங்கள் ஆலய வழிபாட்டு முறை, அமைந்திருக்கிறது. இங்கே அமைதியை எதிர்பார்த்து முடியாது. அமர்க்களம், ஆரவாரம்; மேளதாளம், கண்டாமணி, அதிர்வேட்டு இருக்கத் தானிருக்கும். அமைதியாக த்யானம் பண்ண அவரவர் வீட்டிலும் பூஜாக்ருஹமுண்டு. ஆற்றங்கரை, குளத்தங்கரை உண்டு" என்று சொன்னேன்.

இப்படிச் சொன்னதால் கோயிலில்

என்றொரு சந்தஸ் உண்டு. அதிலே 32 அக்ஷரங்கள் இருக்கின்றன.

நரசிம்ஹ மந்திரம் இருக்கிறதே, அது அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிறது. முதல் வரியிலே, பூர்வார்த்தத்திலே பதினாறு அக்ஷரங்கள், உத்ரார்த்தத்திலே பதினாறு அக்ஷரங்கள். ஆக மொத்தம் 32 அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரமும் ஒவ்வொரு பிரும்ம வித்யையை எடுத்துச் சொல்கிறது. இவ்வாறு 32 பிரும்ம வித்யைகள் பேசப்படுகின்றன. அந்த 32 பிரும்ம வித்யைகளும் நம் நரசிம்ஹ அனுஷ்டுப் மந்திரத்திலே அடக்கம். ஆகையினால், இந்த 32 பிரும்ம வித்யைகளாலும் ஆராதிக்கப்படக் கூடியவன் அந்த ஸர்வ வியாபியான எம்பெருமான். அவனே மஹாவிஷ்ணு என்று அழைக்கப்படக்கூடியவன்.

ராமாயணம் முழுவதையும் பார்த்தோமானால் அதுவும் அனுஷ்டுப் சந்தஸ்ஸில்தான் அமைந்திருக்கிறது. பிரும்மா, வால்மீகிக்கு அனுக்கிரஹம் பண்ணினார்.

"என்னுடைய அனுக்கிரஹத்தினால் சரஸ்வதி உன்னுடைய வாக்கிலே வருவாள்..." என்று அவர் சொன்னதனாலே, நமக்கு ஏற்றமுடையதான ராமாயணம் கிடைத்தது.

மந்திர ராஜன் என்று சொல்லக்கூடிய நரசிம்ஹ மந்திரத்துக்குரிய அதே அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிறது ராமாயணம். நரசிம்ஹ மந்திரமும் ஏற்றமுடையது. அதனால் ராமாயணமும் பெருமையடைந்து நிற்கிறது.

விராட் சந்தஸ் என்றொரு சந்தஸ். அதிலே பத்து அக்ஷரங்கள்.

நிச்சயதார்த்த மந்திரத்தில் 'பிரஜயாச விராட் பவா' என்று சொல்வார்கள். அதாவது, இந்தப் பெண்ணானவள் எப்படி விராட் சந்தஸ்ஸில் பத்து அக்ஷரங்கள் உண்டோ, அந்த மாதிரி பத்து பிள்ளைகளைப் பெற்று பெரு வாழ்வு வாழ வேண்டும்! என்று ஆசீர்வாதம்.

ஆக, பத்து அக்ஷரங்கள் கொண்டது விராட் சந்தஸ்.

இதே மாதிரி காயத்ரி சந்தஸ்! அது 24 அக்ஷரங்கள் கொண்டது. இந்த சந்தஸில் எத்தனையோ மந்திரங்கள் இருக்கின்றன.

மூன்று காலமும் பண்ணக்கூடிய ஹோமங்களுக்கு காயத்ரி சந்தஸில் அமைந்த மந்திரங்கள் ஓதப்படுகின்றன.

பிராதஹ் ஸவவும் -- அதிகாலையில் பண்ணக்கூடியது மத்தியானத்தில் பண்ணக்கூடியது, மாலையில் பண்ணக்கூடியது... இந்த மூன்று இடத்திலேயும் பிரதான ஹோமங்களை காயத்ரி சந்தஸில்தான் பண்ணுகிறோம்.

ஏனென்றால் அந்த பகவானுக்கே காயத்ரி சந்தஸ் என்றால் அவ்வளவு இஷ்டம்!

காயத்ரியை நாம் தியானம் பண்ணினால், சூர்ய மண்டலத்தை இயக்குகிறவனாய், விராஜமானனாக இருக்கிற பரமாத்மா பரமதிருப்தி அடைகிறான்.

ஒவ்வொரு தேவதைக்கும் ஒவ்வொரு காயத்ரி அமைந்திருக்கிறது.

அவரவர்களும் இரைச்சல் போட்டுக் கொண்டு, அரட்டை அடித்துக் கொண்டிருப்பதற்கு லைசென்ஸ் தந்ததாக அர்த்தமில்லை. சாஸ்த்ரோக்தமாக அனுமதிக்கப்பட்டிருக்கும் ஓசைகளை – மணி அடிப்பது, வேத கோஷம், தேவாரம், பஜனை, மேளம், புறப்பாட்டில் வெடி. இவற்றைத்தான் – நான் சொன்னது.

இந்தமாதிரி சாஸ்த்ரோக்தமான சப்தங்களுக்கே மௌன த்யானத்தில் ஒருத்தனை ஈடுபடுத்துகிற அபூர்வமான சக்தி உண்டு. இம்மாதிரி சப்தங்களுக்கு நடுவிலேயே ஸந்நிதானத்தில் சிறிது கண்ணை மூடிக் கொண்டால், அல்லது தக்ஷிணாமூர்த்திக்கு எதிரே ஜபம் பண்ண உட்கார்ந்து கொண்டால், சட்டென்று ஒரு லயிப்பு உண்டாகி விடும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

விஷ்ணுவுக்கு என்ன காயத்ரி என்று பார்த்தோமானால்,

நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி

தன்னோ விஷ்ணு ப்ரசோதயாது

– இப்படி நாராயணனுடைய பிரதாபத்தை எடுத்துச் சொல்லக்கூடிய காயத்ரி மந்திரம்.

இங்கே ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். நாராயண மந்திரம் மிகவும் உயர்ந்தது என்பதைப் பார்த்துக் கொண்டே வருகிறோம்.

அப்படிப்பட்ட நாராயண மந்திரத்தை விளக்க வந்தது இந்த காயத்ரி. அப்போது, இந்த காயத்ரிக்கு என்ன பெயர் வைக்க வேண்டும்...?

நாராயண காயத்ரி என்றுதானே பெயர் வைக்க வேண்டும்? ஆனால், உலகிலே அதைப் போன்ற வழக்கு உண்டா என்றால், கிடையாது!

நாராயண காயத்ரி என்றே கிடையாது!

அடுத்ததாக என்ன வருகிறது என்று பார்த்தால் 'வாஸுதேவாய தீமஹி' என்று வரும். ஆனால் அதை வாசுதேவ காயத்ரி என்றும் நாம் சொல்வது கிடையாது.

பின்னே என்னதான் பெயர் அதற்கு...? – விஷ்ணு காயத்ரி என்றுதான் பெயர்!

'விஷ்ணு காயத்ரியைச் சொல்லுங்கள்' என்றால், 'நாராயணாய வித்மஹே...' என்றுதான் ஆரம்பிக்க வேண்டும்.

ருத்ர காயத்ரியைச் சொல்லுங்கள் என்றால் 'தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி' என்று சொல்ல வேண்டும்.

– இப்படி அந்தந்த தேவதைகளுக்குரிய காயத்ரியைச் சொல்லிக்கொண்டே வரும் போது, இது பிரத்யேகமாக விஷ்ணு காயத்ரி.

'விஷ்ணு காயத்ரியினால் ஹோமம் பண்ணுங்கள். விசேஷமான பலனை நீங்கள் அடையலாம்' என்கிறார் ஆபஸ்தம்பர்.

இதனாலேயே விஷ்ணு என்கிற பெயரினால் ஏற்படக்கூடிய பெரும்பயன் நமக்குத் தெரிகிறது அல்லவா!

இந்த விஷ்ணு காயத்ரிக்குள்ளே மூன்று மந்திரங்கள் இருக்கின்றன. நாராயண மந்திரம், வாசுதேவ மந்திரம், விஷ்ணு மந்திரம்.

இதிலே நாராயண மந்திரம் எட்டெழுத்துடன் கூடியது. அஷ்டாக்ஷரம்.

வாசுதேவ மந்திரம் – 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய – பன்னிரண்டு அக்ஷரங்கள் கொண்டது. (துவாதசாக்ஷர மந்திரம்) அதற்கடுத்தது 'ஓம் விஷ்ணவே நம:' என்கிற ஆறெழுத்து மந்திரம். ஆக, எட்டெழுத்து, பன்னிரண்டெழுத்து, ஆறு எழுத்து என மூன்றின் கூட்டுத் தொகை 26!

விஷ்ணு காயத்ரியில் இந்த 26 என்கிற எண் வந்து அமைந்திருப்பது ரொம்பவும் விசேஷம். நான் முன்பே சொல்லியிருக்கிறேன் – 26 என்று சொன்னாலே பகவான் வந்து குதிப்பான் என்று... இந்த விஷ்ணு காயத்ரியைச் சொன்னாலோ, அவன் நம் மடியிலேயே வந்து உட்கார்ந்துவிடுவான்!

(தொடரும்)

**"டாக்டர், அந்த பேஷண்ட்டை வார்டு மாற்றச் சொன்னீங்களே, ஸ்ட்ரெச்சரில் படுக்கமாட்டேன்னு அடம்பிடிக்கிறார்!"**

**"ஏன்?"**

**"கோர்ட்டுக்குக் கொண்டு போயிடுவோம்னு பயமாம்!"**

**– பொள்ளாச்சி கே. சித்ரா**



"என்றுமே இளமையாக இருக்க யோகாவில் வழிமுறைகள் உள்ளதா?'' - கோவையில் ஈஷா யோகா மையம் நடத்தும் ஜக்கி வாசுதேவிடம் கேட்டபோது, "என்றுமே ஒரே நிலையில் இருப்பது என்பது வளர்ச்சியற்ற நிலை அல்லவா? அதற்கு எதற்கு யோகா?" என்றார் உடனே.

"குழந்தையாக இருக்கும்போது தேவையான அறிவு கிடைத்திருக்காது. வயது முதிர்ந்தபின், அறிவு இருந்தாலும், உடலில் போதிய செயல் திறன் இருக்காது. இரண்டுக்கும் இடைப்பட்ட இளமைதானே வசீகரமானது?"

"உண்மைதான். மனிதன் எப்போது குழந்தைப் பருவத்திலிருந்து இளைஞன் ஆகிறானோ, அப்போதுதான் அவனுடைய சக்தி சரியான அளவை அடைகிறது. இது உடல் அளவில் மிகப் பெரிய சுதந்தரம். ஆனால் இந்த சுதந்தரத் தன்மையை அடையும் அதே நேரத்தில் இயற்கையான சில இச்சைகளும் (URGES) சேர்ந்து வருகின்றன. தன் வாழ்க்கை, இந்த பிரபஞ்சம், தனது உயிர்த்தன்மை இவை பற்றிய சரியான உணர்வு இல்லாமல் இந்தப் பருவத்தை அடைந்தால், அவன் தன் வாழ்க்கையை இந்த சாதாரண இச்சைகளுக்கு அடகுவைத்து விடுகிறான்."

"இயற்கையாக வரும் இந்த இச்சைகளை எப்படித் தவிர்ப்பது?"

"தவிர்க்க வேண்டும் என்று யார் சொன்னார்கள்? பிரபஞ்சம் தொடர்ந்து நடைபெற அவை அவசியமானவைதான். மனிதன் அவற்றை விலக்கி வாழ வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இந்த இச்சைகள் தான் வாழ்க்கையின் நோக்கம் என்று கருதிவிடக் கூடாது. முன்பெல்லாம் நமது கலாசாரத்தில் குழந்தைப் பருவம் முடிவுறும் நிலையில் மனிதனை உலக வழிகளுக்கு முறையாக அறிமுகப் படுத்தும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. அவனுடைய கடவுள் தன்மையை அவன் உணர

• பிராணாயாமப் பயிற்சிகள்



• ஜக்கி வாசுதேவ்

# என்றும்

# இளமையாக இருப்பது எப்படி?

வழி செய்வதால், அவனுடைய சக்தி முழுவதும் இந்த உலகத்திற்கு உபயோகமான முறையில் செலவழிக்க முடியும்.''

''ரிஷிகள் பலப்பல வருடங்கள் தவம் செய்ததாகப் புராணங்கள் கூறுகின்றனவே? அவர்களுக்கு வயது வரம்பு கிடையாதா?''

''உடல் முதுமையை அடைவது என்பது இயற்கையின் நியதி. யாராலும் அதைத் தடுக்க முடியாது. ஆனால் யோகப் பயிற்சிகள் மூலம் முதுமையடையும்





வேகத்தை நிச்சயம் குறைக்கலாம்.''

''யோகாவில் இதற்கான பயிற்சிகள் உள்ளனவா?''

''முதலில் நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். உடல் அளவில் இளமையாய் இருப்பதும், மனத்தளவில் இளமையாய் இருப்பதும் வேறு வேறு. உடலளவில் சக்தி குறையலாம். ஆனால், வாழ்க்கையில் ஆர்வம் குறைய வேண்டியதில்லை. வியாதிகள் வந்து சூழத் தேவையில்லை. என்றும் புத்துணர்ச்சியுடன் ஓர் இளைஞன் துடிப்புடன் வாழ்க்கையைத் தொடர முடியும். யோகா முறைகளில் இதற்கு தனியான பயிற்சிகள் அவசியம் இல்லை. நாங்கள் தரும் பயிற்சிகள் இவற்றையும் சேர்த்துத் தான் அமைக்கப்பட்டுள்ளன.''

''இளமையை மேம்படுத்தும் பயிற்சிகள் என்னென்ன உங்கள் வகுப்புகளில் இருக்கின்றன?''

''பிராணாயாமம், தியானம், மற்றும் ஆசனப் பயிற்சிகளை எங்கள் வகுப்புகளில் கற்றுத் தருகிறோம். பதினான்கு வயதிலேயே இந்தப் பயிற்சிகளைத் துவங்கினால், வாழ்க்கை மிக அர்த்தமுள்ளதாகிவிடும். பிராணாயாமம் மனிதனின் உயிர்ச் சக்தியை மேம்படுத்துகிறது. ஆஸ்துமா, ரத்தக் கொதிப்பு, நீரிழிவு, மைக்ரேன் தலைவலி போன்ற நோய்களை இந்தப் பயிற்சி சரிசெய்து விடும். உடல் பூரண ஆரோக்கியத்துடன் திகழும். நோய்கள் நெருங்காது. இளைஞர்களுக்கு முக்கியமாக நினைவாற்றலும், கவனசக்தியும் வலுப்பெறும். ஆசனப் பயிற்சிகள் உடல்திறனை உயர்த்துகின்றன. தியானம் மன அமைதியையும், ஆனந்தத்தையும் கொண்டு தரு

## இளமைப் போட்டி — 3

**ஆனந்தம் தருவது தியானம். ஆனந்தத்தைப் 'பெயர் மாற்றி'த் தந்த ஆறெழுத்து இயக்குநர் யார்?**

கின்றது."

"இன்றைய இளைஞர்கள் பல போட்டிகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. முந்தின தலைமுறைகளை விடக் கடினமாக உழைக்க வேண்டியிருக்கிறது. இதற்கு நடுவே யோகப் பயிற்சிகளுக்கு அவர்களால் எப்படி நேரம் ஒதுக்க முடியும்?"

"அடுத்த வருடம் ஒலிம்பிக் பந்தயத்தில் கலந்து கொள்ளப் போகிறேன். ஆனால் அதற்கான பயிற்சிகள் செய்ய எனக்கு நேரமில்லை என்று சொல்வதைப் போல் இருக்கிறது, நீங்கள் சொல்வது! யோகாவின் மூலம் உடல், உடலின் ரசாயனம், மற்றும் சக்தியை தான் விரும்பும் முறையில் ஒரு இளைஞனால் உருவாக்கிக் கொள்ள முடியும். பிராணாயாமம், தியானம் போன்ற பயிற்சிகளால் எட்டு மணி நேரத்தில் செய்யக்கூடிய ஒரு வேலையை மூன்று மணி நேரத்தில் முடிக்கலாம். யோகப் பயிற்சிகளுக்காக செலவு செய்யும் ஒரு மணி நேரத்தால் ஒவ்வொரு நாளும் உங்களுக்குக் கூடுதலாக நான்கு மணி நேரங்கள் கிடைக்கும்!"

"இளமையாக இருக்க வேண்டும் என்று உங்களிடம் யாராவது வருகிறார்களா?"

"அப்படியும் சிலர் வருகிறார்கள். முதியவர்கள் மட்டுமல்ல, இளைஞர்களும் இப்படி வருகிறார்கள். பயிற்சி முடியும் போது அவர்கள் நிச்சயமாக பத்து வயது குறைவான உணர்வுடன் செல்கிறார்கள். ஆனால் இந்த உணர்வு நாங்கள் தரும் பயிற்சிகளின் வெறும் பக்க விளைவுகள்தான் (Just Side effects). உண்மையான விளைவுகள் இன்னும் மேன்மையானவை. மார்க்கண்டேயனைப் போல் என்றும் பதினாறாக இருக்க வேண்டும் என்று விரும்புபவர்கள் அந்தக் கதையைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். என்றைக்கு இறைத் தன்மையை உங்களால் தொட்டுத் தழுவிக் கொள்ள முடிகிறதோ, அப்புறம் உங்களுக்கு முதுமையே கிடையாது."

"யோகப் பயிற்சிகளால் எப்படி இளமையை நீட்டிக்க முடியும்?"

"மருத்துவ முறையில் பார்த்தாலும், நம் உடலில் உள்ள கோடிக்கணக்கான செல்கள் அனைத்தும் இரண்டரை வருடங்களுக்கு ஒருமுறை இறந்து புதிய செல்கள் பிறக்கின்றன. அதாவது இரண்டரை வருடங்களுக்கு ஒருமுறை மனிதன் மறுபிறவி எடுக்கிறான். யோகப் பயிற்சிகள் மூலம் இந்தப் புதுப் பிறவிகளைப் பொலிவுள்ளதாக்கலாம். இது புரியாமல் பியூட்டி பார்லர்களுக்கு அடிக்கடி போவதால் தோற்றத்தை வேண்டுமானால் பொலிவாக்கலாமே தவிர, இளமையாய் உணர முடியாது. முகத்தை ரசாயனங்களால் மாற்றி, தலைமுடிக்கு பெயிண்ட் பூசி, சரும அளவில் மட்டுமே செய்து கொள்ளும் இந்த அழகு வெயிலிலும், மழையிலும் காணாமல் போய்விடும். எந்த மனிதன் சந்தோஷமாக, அமைதியாக, அன்பாக, ஆனந்தமாக தன்னுள் உணர்கிறானோ, அவனே உண்மையில் அழகானவன். மூக்கின் நீளத்திலும், முடியின் நிறத்திலும் இல்லை அழகு. மழையோ, புயல்காற்றோ, சுற்றுப்புறமோ, வாழ்க்கைச் சூழலோ - எதனாலும் அந்த அன்பான அழகைத் தொட முடியாது. கலைக்க முடியாது."

"இது கம்ப்யூட்டர் யுகம். காலத்திற்கேற்ப உங்கள் யோகா மாறியிருக்கிறதா?"

"தொழில்நுட்பம் என்று எடுத்துக் கொண்டால், மனிதன் மாட்டு வண்டியிலிருந்து கம்ப்யூட்டருக்கு மாறியிருக்கிறான். ஆனால் உள்தன்மையில் அவன் வளரவேயில்லை. ஆதிமனிதனுக்கு இருந்த அதே பயம், அதே கோபம், அதே பொறாமை, அதே காழ்ப்பு இன்றைய மனிதனிடமும் தொடர்கின்றன. அதனால் யோகாவின் அடிப்படை நோக்கம் மாறவில்லை. ஆனால் அதை நாங்கள் வழங்கும் முறையில் நிச்சயம் இன்றைய தேவையை மனத்தில் கொண்டு மாற்றங்கள் செய்திருக்கிறோம். எங்கள் பயிற்சிகளுக்கு வர நீங்கள் இன்ன மதத்தினராகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. உங்களுக்கு கடவுள் நம்பிக்கை இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. மதம், இனம், கடவுள்களுக்கு அப்பாற்பட்ட பயிற்சிகள் எங்களுடையது. வாழ்க்கைக்குத் தேவையான பயிற்சிகளை விஞ்ஞான முறையில் யோகாவின் உதவியோடு அமைத்திருக்கிறோம். பயில்வான் போன்ற பெரிய உடலையும் யோகாவால் உருவாக்க முடியும். ஆனால் அதற்கு அவசியம் இல்லை. எங்கள் பயிற்சிகளால் ஒரு உறுதியான உடலை உருவாக்க முடியும். உறுதியான உடல் என்பது, நாம் செய்ய வேண்டிய வேலைகள் அனைத்தையும் செய்து முடித்த பின்பும் தளர்வடையாமல் புத்துணர்வோடு இருப்பது. எங்கள் பயிற்சிகள் இந்த நோக்கத்தைத்தான் கடைப்பிடிக்கின்றன."

சந்திப்பு : **சுரேஷ் - பாலா**

புகைப்படங்கள் : **கண்ணன், கே. எஸ்.அருணாச்சலம்**

• படேல்: உதவினால் தப்பில்லை!



## “கழுதைகளுக்கு மட்டும்தான் பட்டம் தரப்படும்!”

கர்நாடக சட்டமன்றத்தில் எப்போதாவது சுவையான விவாதங்கள் நடைபெறும். அப்படிப்பட்ட ஒரு விவாதம் கல்வி மானியக் கோரிக்கையின்போது நடந்தது. பாரதிய ஜனதா உறுப்பினர் சுரேஷ்குமார், “படித்துப் பட்டம் பெறவேண்டிய அவசியம் இப்போது இல்லை. எந்த வகையான பட்டங்களையும் விலைகொடுத்தே வாங்கி விடலாம். இதற்காகவே பெங்களூரில் ஒரு கடை இருக்கிறது. அங்கு ஐந்தாயிரம் ரூபாய் கொடுத்தால் பி.ஏ. பட்டமும், பத்தாயிரம் ரூபாய்க்கு தொழிற்கல்விச் சான்றிதழும் வாங்கி விடலாம். தேர்வில் தோல்வியடைந்து விட்டோமே என்று வருத்தப்படத் தேவையில்லை” என்றவர், அதற்கு ஒரு கதையையும் சொன்னார்.

கிராமத்தைச் சேர்ந்த ஜமீன்தார் ஒருவர் பட்டப் படிப்புக்கான சான்றிதழ்கள் கடையில் விற்பனை செய்யப்படுவதை அறிந்து வாங்கிப் போவதற்காக பெங்களூர் வந்தார்.

குறிப்பிட்ட கடைக்குச் சென்று 5000 ரூ. கொடுத்து தனது பெயருக்கு ஒரு பி.ஏ. பட்டம் வாங்கிக் கொண்டு ஊருக்குத் திரும்பினார்.

வழியில் அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. நமக்கு மட்டும் பட்டம் வாங்கிக் கொண்டோமே, நாம் ஆசையாக வளர்க்கும் குதிரைக்கும் ஒரு பட்டம் வாங்கிக் கொள்ளலாமே என்று நினைத்து மீண்டும் அந்தக் கடைக்கு வந்தார்.




கடைக்காரரிடம் 5000 ரூபாய் கொடுத்து இன்னொரு பி.ஏ. சான்றிதழ் கொடுக்கும்படிக் கேட்டார். கடைக்காரர், “யாருடைய பெயருக்கு?” என்று கேட்டார்.

“குதிரைக்கு”

“குதிரைகளுக்கெல்லாம் தர முடியாது. இங்கே கழுதைகளுக்கு மட்டும் தான் சான்றிதழ்கள் தரமுடியும்” என்றாராம் கடைக்காரர்.

சுரேஷ்குமார் இதைச் சொன்னதும் சபையில் சிரிப்பு எழுந்தது. அப்போது குறுக்கிட்ட பேரவைத் தலைவர் ரமேஷ்குமார், “கழுதைகள் மீது கடைக்காரர் அபார கௌரவம் வைத்துள்ளதையே இதுகாட்டுகிறது. இதுகுறித்து முதலமைச்சர் படேலின் கருத்தை அறிய விரும்புகிறேன்” என்றார்.

“வாயில்லா ஜீவன்களுக்கு உதவுவதில் தவறில்லை” என்று முதல்வர் ஒரு போடு போட, சபை மறுபடியும் சிரிப்பில் மூழ்கியது.

## காப்பி அமைச்சர்

கர்நாடகத்தின் கல்வி மந்திரியாக இருந்தவர் சோம சேகர். இவர் மீது ஒரு குற்றச்சாட்டு. 1971-ல் இவர் சட்டப் படிப்பிற்கான தேர்வு எழுதும்போது




"நான் நம்பறேன். இதான் உங்க முதல் காதல் அனுபவம்னு.. ப்ளீஸ் இதைக் கழட்டிடுங்க!

— ஜி. செல்லத்துரை



''ஆபீசுல தூங்கிகிட்டிருந்தப்போ ஒரு தப்பு நடந்து போச்சு!''

''ஏன்... ஏன்ன ஆச்சு?''

''எழுப்பின மேனேஜரை 'போடா அறிவு கெட்ட முண்டம்'-னு திட்டி எட்டி உதைச்சுத் தொலைச்சுட்டேன்....!''

— ஜெயாப்ரியன்



''அந்த நர்சோட கவனிப்பே சரியில்லே...''

''ஏன்?''

''பின்னே, 'ஐ லவ் யூ'ன்னு சொன்னா கண்டுக்கவே மாட்டேங்கறாளே!''

— தக்கலை லீலா இராம்

காப்பி அடித்தார் என்றும் காப்பி அடித்த குற்றத்திற்காக மேற்கொண்டு தேர்வு எழுதுவதிலிருந்து விலக்கி வைக்கப்பட்டார் என்றும் அம்மாதிரி 'தேர்வில் பிட் அடித்தவர் எப்படி மாநிலக் கல்வி மந்திரியாக நீடிக்கலாம்?' என்றும் பிரச்னை கிளப்பப்பட்டது. 'அரசியலில் தம்மைப் பிடிக்காதவர்கள் செய்கின்ற சதி இதுவென்றும் இம்மாதிரியான சம்பவம் நிகழவேயில்லை' என்றும் சமாளித்தார் அமைச்சர். 'அப்படியொரு சம்பவம் நடந்தது உண்மைதான்' என்று பல்கலைக் கழக வட்டாரங்கள் தெரிவித்தன. உடனே 'பல்கலைக் கழகத்திலும் தனக்கு வேண்டாதவர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் சில பத்திரிகைகளின் துணையுடன் எனக்கெதிராக நடந்து கொள்கிறார்கள்' - என்று சொன்ன அமைச்சர், "இது பற்றி விசாரிக்க நானே ஒரு கமிட்டியை நியமிக்கிறேன்" என்று சொல்லி, தனக்கு வேண்டியவர்கள் கொண்ட கமிட்டி ஒன்றைத் தாமே நியமித்தார்.

'விசாரணையை' மேற்கொண்ட கமிட்டி எதிர்பார்த்தது போலவே 'அப்படியொரு சம்பவம் நடக்கவில்லை' என்று விளக்கெண்ணெய் அறிக்கை ஒன்றைத் தந்தது.

இது சம்பந்தமான விவகாரம் சட்டமன்றத்தில் வந்தபோது, கம்யூனிஸ்ட் உறுப்பினர் ஒருவர், ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

"இதற்கெல்லாம் கமிட்டியே வேண்டாம். ஏனெனில் நானும் அமைச்சரும் ஒரே பள்ளியில் படித்தவர்கள்; ஒரே கல்லூரியில் ஒரே வகுப்பில் சேர்ந்தவர்கள்; ஹாஸ்டலில் ஒரே அறையில் இருந்தவர்கள். இருவரும் ஒன்றாகத்தான் ஒரே ஹாலில்தான் அந்தப் பரீட்சையை எழுதினோம். சோமசேகர் காப்பி அடித்து எழுதினபோது எக்ஸாமினரிடம் மாட்டிக் கொண்டு மேற்கொண்டு பரீட்சை எழுத முடியாமல் வெளியில் அனுப்பப்பட்டார். பிற்காலத்தில் இவர் அமைச்சராவார் என்பது அவர்களுக்குத் தெரியாததால் அன்றைக்கு அப்படி நடவடிக்கை எடுத்தார்கள்" என்று ஆணித்தரமாகப் பேச, சபை ஸ்தம்பித்தது!

திடுக்கிட்டுப் போய் உட்கார்ந்திருந்த கல்வி அமைச்சர், சுதாரித்துக் கொண்டு கோபத்துடன் எழுந்தார்.

"அவ்வளவும் பொய். நாங்கள் ஒன்றாகப் படித்தோம் என்பதற்காக அவர் சொல்வதையெல்லாம் ஒப்புக் கொள்ள வேண்டும் என்பதில்லை. உறுப்பினர் ஒரு பெண்ணைக் கற்பழித்தார்; அதை நானே நேரடியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன் என்று என்னாலும் சொல்ல முடியும்!" என்று பதில் சொன்னார்.

'பார்த்துக் கொண்டிருந்தவர்' தடுத்திருக்க வேண்டாமோ?

எது எப்படியோ, அமைச்சர் ராஜினாமா செய்துவிட்டதுதான் லேட்டஸ்ட் நியூஸ்.

— அமுதவன்

# தீபாவளிப் பரிசு

## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் மகத்தான முதலீட்டுத் திட்டம்!






ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்
5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)
பெற்றுக் கொள்ளுங்கள்

அத்துடன்

**4 இலக்கியப் பொக்கிஷங்களையும் அன்பளிப்பாகப் பெறுங்கள்**

1. **'கல்கி'** வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. **'கல்கி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் **'அமுதசுரபி'** இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. **'அமுதசுரபி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ பத்தாயிரம்) **'ஸ்ரீராம் டிரஸ்ட்'** பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

**'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,**
**சென்னை – 600 102. தொலைபேசி எண் : 628 6869 628 7879**

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி ..................................................
   முகவரி : ..................................................
   ..................................................
   ..................................................
   ..................................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் : ..................................................
3. வாரிசுதாரர் : ..................................................
4. **'கல்கி' 'அமுதசுரபி'** இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி : ..................................................
   ..................................................

CHEQUE / D.D. No. ................................ DT ................................ ON ................................

அன்புள்ள

இடம் ................................

தேதி ................................

முதலீட்டாளர் கையொப்பம்




## வட்டமேஜை

# நீர்தான் ஐயா பகைவன்!

### ஜோக்?

✉ ஜோதிடப் பக்கங்கள் 'ஜோக்' என்றால் சரி. ஸீரியஸாகவே ஜோசியம்தான் என்றால் மிகவும் வருந்துகிறேன். நம்பிக்கை சிதையவும், தவறான நம்பிக்கைகளை வளர்த்துக் கொள்ளவுமே ஜோதிடம் உதவும்! சயன்ஸ் என்பது சரியான 'புருடா'.

சென்னை - 20,
சுப்ர.பாலவை.

### ஜோர்!

✉ இந்த வாரம் நம்ம ராசிக்கு கணிச்சது அப்படியே நடந்திச்சு. ஜோசியத்தில் நம்பிக்கை இல்லாதவனை நம்பிக்கைத் துளிர் ஏற்படுத்தி விட்டார். அக்னி சர்மாவின் திடீர் பிரவேசம் எங்களுக்குப் பிரகாசம்...! தொடரட்டும் இப்பகுதி ப்ளீஸ்...!

பரங்கிப்பேட்டை,
பி.எஸ். மணிமாறன்.

### நீரே பகைவன்!

✉ பாராட்டு; குற்றம்சாட்டல், தட்டிக் கொடுத்தல் என்று எத்தனையோ 'நட்பு'த் தன்மைகள் இருந்தன - 'பகைவன்' பட விமரிசனத்தில்!

சென்னை - 14,
அய்யாறு வாசுதேவன்.

✉ மதங்களை சீண்டிப் பார்ப்பதாக உள்ள 'பகைவன்' படத்துக்கு இன்னும் யாரும் ஸ்டே கேட்கலையா? என்று 'ஊதி' விடும் நீர்தான் அந்தப் படத்தை எடுத்தவர்களுக்கு நிஜமான 'பகைவன்'!

வேலூர், வே. ந. கதிர்வேல்.

### குதூகலம்!

✉ தங்களின் அசத்தலான கேள்விகளுக்கு ராஜாவின் அலட்டலில்லாத பதில்கள் ஆத்மார்த்தமாக அமைந்திருந்தது. அவருக்குள் ஒரு போட்டோக் கலைஞனும் ஒளிந்திருப்பதை உங்கள் பேட்டி மூலம் தான் முதலில் அறிந்து கொண்டேன்!

சிதம்பரம், ஜி. துளசி.

### குழப்பம்!

✉ இளையராஜாவின் பேட்டி, குழப்பமடா சாமி! நிருபர் கேட்ட எளிதான கேள்விகளுக்குத் தத்துவார்த்தமாக, புரியாத புதிர் போல் அவர் பதிலளித்தது மிகவும் வியப்பாகவும், எரிச்சலாகவும் இருந்தது. ஒருவேளை Multiple choice கேள்விகளாக இருந்தால், இளையராஜாவின் பேட்டி அதிக மக்களைச் சென்றடையலாம்.

கோவை, எஸ். கார்த்திக்.

### வாழ்க!

✉ முதல் பரிசுக் கதை படித்தேன். 'மார்க்கட்ல திடீர்னு என்னடா கலாட்டா' என்று பாட்டி கேட்கும்போது 'அடிப்பாவி, உன்னால்தானே அவ்வளவும்' என்று சீறத் தோன்றுவது படைப்பின் வெற்றி. முழுதான, நிறைவான கதை. இயல்பான சம்பவங்களில் கதை கோர்த்து வெற்றியைத் தொட்ட படைப்பாளிக்கு நல்வாழ்த்துக்கள்.

ஸ்ரீரங்கம், ஆர். ஸ்ரீநிவாசன்.

### புதுசு!

✉ பற்களைப் பாதுகாப்போம் கட்டுரை படிக்க மட்டுமல்லாமல், பாதுகாக்கப்படவும் வேண்டிய பொக்கிஷம். தெரியாத பல அரிய செய்திகளைத் தெரிந்து கொள்ளப் பெரிதும் உதவியது.

சிதம்பரம்,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

### கருணை ப்ளீஸ்!

✉ கார்ட்டூனிஸ்ட் தாமரையிடம் நான் கேட்டுக் கொள்வதெல்லாம் - ஜெயலலிதா பட விஷயத்தில் இன்னும் கொஞ்சம் கருணை காட்டுங்கள்!

திருச்சி - 14, ராஜிராதா.

### சிறப்பு!

✉ 'தடைகளின்றி நடந்த தலித் ஊர்வலம்' முதல்வருக்குப் பெருமையினையும், எதிர்க்கட்சிகளுக்குக் கவலையினையும் அளித்ததை தலையங்கம் தனக்கேயுரிய முறையில் அழகாகச் சுட்டிக்காட்டியிருக்கிறது.

சேலம்,
மு. இரவிச்சந்திரன்.



அனந்தாச்சாரி தேரடி மண்டபத்துக்குப் போய் அரைமணி நேரம் ஆயிற்று.

அதுவரையிலும் திருவனந்தபுரம் வரன் வீட்டார் வரவில்லை.

வாசலுக்கும் கூடத்துக்குமாக மஹாலக்ஷ்மி அலைந்து கொண்டிருந்தாள். அதைப் பார்த்துவிட்டு கிருஷ்ணமாச்சாரி வெளியே வந்தார்.

அனந்தாச்சாரி அமர்கிற திண்ணை மூலையில் போய் உட்கார்ந்தார்.

"நீ உள்ற போ! அலைய வேண்டாம். கார் வந்தா நான்

# 9 கன்னியாக

வந்து சொல்றேன்" என்றார்.

அவரை ஒருமுறை முறைத்துவிட்டு மஹாலக்ஷ்மி வீட்டிற்குள் போனாள்.

ஐந்து நிமிஷம் கழித்து நர்மதா தெருத் திண்ணைக்கு வந்தாள்.

"அப்பா!" என்று தயக்கமாக அழைத்தாள்.

"என்ன நர்மூ?"

"தாத்தா கூட்டத்துக்குப் போய் அரை மணி நேரம் ஆறது! நேக்கென்னவோ வயத்தைக் கலக்கறது. ரெண்டு நிமிஷம் எட்டிப் பார்த்துட்டு வந்துடட்டா?" என்றாள்.

"நீயா?" கிருஷ்ணமாச்சாரிக்கு மேலே என்ன பேசுவதென்று புரியவில்லை. திரும்பி உள்ளே மஹாலக்ஷ்மி தெரிகிறாளா என்று பார்த்தார். இல்லை.

"நான் வேணும்னா போய்ப் பார்த்துட்டு வந்துடறேன்! நீ இப்ப வெளியே போறது நன்னா இருக்காது."

"இது சீரியஸான விஷயம்! நீங்க போய் பிரயோஜனமில்லே."

"அவா வந்துட்டா?"

"வந்தா உக்காத்தி வைங்கோ. பலாரம் காப்பி குடுங்கோ."

**வையவன்**

அவள் எந்த அர்த்தத்தில் அப்படிச் சொல்கிறாள் என்று கிருஷ்ணமாச்சாரி விழித்தார்.

"என்னப்பா பார்க்கறேள்?"

"இல்லே.." என்று இழுத்தார்.

"அம்மா என்னைப் புரிஞ்சுக்கலை. அவ வெறும்ன அம்மாவாவே இருந்தாப் போறும்னு நெனைக்கறா. நீங்களுமாப்பா?"

கிருஷ்ணமாச்சாரி அவளையே பார்த்தார்.

"சொல்லுங்கோப்பா."

அவர் மனசில் ஆண்டாள் சந்நிதியில் அவள் கேட்ட கேள்வி வந்து போயிற்று.

"சரிம்மா... நீ போய்ட்டு வா! சட்டுனு வந்துடு."

நர்மதா படியிறங்கி விறுவிறுவென்று நடந்தாள்.

**மோ**கன்ராஜின் ஜாதிக்காரர்கள் ஏறி வந்த லாரி, மண்டபத்தின் ஓரம் நிறுத்தப்பட்டிருந்தது.

அதில் வந்த கூட்டம் நேரடி மண்டபத்தில் குழுமியிருந்தவர்களோடு கலந்து உட்கார்ந்தது.

மேடையில் அனந்தாச்சாரி ஒரு மேஜைக்குப் பின்னால் நின்று பேசிக் கொண்டிருந்தார். மேடையை நெருங்கும்போதே அவளுக்கு ஒன்று தெளிவாகி விட்டது.

ஓரங்கட்டப்பட்டிருந்த லாரியும் கூட்டத்தில் உட்கார்ந்திருந்த மோகன்ராஜின் ஜாதிக்காரர்களும் தாத்தாவின் வெற்றியை சூசகமாக எடுத்துக்காட்டினர்.

அவர் செல்வாக்கு இன்னும் மங்கி விடவில்லை. நர்மதாவுக்கு உடல் சிலிர்த்தது.

மேடைக்குக் கீழே போட்டிருந்த ஒரு நாற்காலியில் அவள் உட்கார்ந்தாள். அனந்தாச்சாரி அவள் வந்ததைக் கவனிக்கவில்லை.

அந்தரங்க சுத்தியான உருக்கத்தோடு அவர் பேசிக் கொண்டிருந்தார்.

"குடிநீர் நாசமாய்ட்டது. விளைநிலம் பாழாயிட்டது. இப்ப இந்த கெமிகல் தொழிற்சாலை வர்றதாலே உள்ளதும் மோசமாகிற வாய்ப்பு உண்டே தவிர வேற முன்னேற்றம் இருக்காது.

மோகன்ராஜை அடிச்சவங்க நம்மைப் பயமுறுத்தி இருக்காங்க. நாங்க பயந்தவங்க இல்லேன்னு போலீஸ் ஸ்டேஷனுக்கு எதிர்க்க நின்னு சவால் விட்டுக் காட்டலாம். என்ன நடந்துடும்? ஒங்கள்ளே பத்துப் பதினைஞ்சு பேரைப் புடிச்சு போலீஸ் ஸ்டேஷனைத் தாக்க முயற்சின்னு கேஸ் போடுவா. லாக்கப்பிலே வைப்பா. இல்லே கண்ணீர்ப்புகை குண்டு போடுவா. நிலைமை மோசமாயிட்டதுன்னா துப்பாக்கி சூடு நடத்துவா. ஒங்களுக்கு ஒண்ணு கோபம் வரும்; இல்லே பயம் வரும். இந்த ரெண்டுனாலயும் உருப்படியா காரியம் சாதிக்க முடியாது. விஷயம் ஜாதிப்பிரச்னை இல்லே.

எல்லா ஜாதிக்கும் குடிக்கத் தண்ணி வேணும். உழறதுக்கு நெலம் வேணும். மனுஷ ஜாதிக்கே வேணும். அதைக் காப்பாத்தறது நம்ம முதல் கடமை. ஆகையினாலே நாளைக்கு மொதல் லாரி வந்து நம்ம ஆத்துமேட்டிலே மணல் வார நாம அனுமதிக்கப்படாது.

# அடி...

மொதல் லாரியை அனுமதிச்சா தொழிற்சாலை கட்ட நாம பச்சை விளக்கு காட்டினதா அர்த்தம்...

"என்ன செய்யலாம்?" அவர் பேச்சை சற்றே நிறுத்தினார்.

கூட்டம் மௌனமாக உட்கார்ந்திருந்தது.

ஓரிருவர் இருமியதையும் கனைத்ததையும் தவிர வேறு ஒலியில்லை.

அந்த ஒலிகளும் யதேச்சையாக எழுந்தவை போன்று உடனே ஒடுங்கின.

ஒரு சிறிய மௌனம் தொடர்ந்தது.

அதைக் கலைத்தவாறு அனந்தாச்சாரி பேச்சைத் தொடர்ந்தார்.

"நீங்க மௌனமாயிருக்கிறது ஏன்னு புரியறது. யோசிக்கிறீங்க. ஆனா வெறும்ன யோசிச்சுண்டே இருந்து ஒரு புண்ணிய முமில்லே."

யாரோ ஒரு அரை ஸ்லாக் அணிந்த இளைஞன், கறுகறுவென்று மீசையோடு எழுந்து நின்றான்.

"சர்தார்ஜி" என்று குரல்கொடுத்தான்.

"வாங்க தம்பி! மேடைக்கு வாங்க" அனந்தாச்சாரி அவனை அழைத்தார்.

ஆனால் அவன் மேடைக்கு வராமலேயே பேசினான்.

"நீங்க சொல்லுங்கோ, நாங்க செய்யறோம். என்ன செய்யச் சொன்னாலும் சரி. உங்க உத்தரவுக்கு நாங்க கட்டுப்படறோம்."

கூட்டத்தில் பலத்த கைதட்டல் எழுந்தது.

அனந்தாச்சாரி அனைவரையும் நோக்கிக் கையெடுத்துப் பணிவுடன் கும்பிட்டார்.

"நீங்க எல்லாரும் எம்மேல வச்சிருக்கிற நம்பிக்கைக்கு என் பணிவான நன்றி. என் திட்டத்தைச் சொல்றேன். நாளைக்கு ஆத்து மேட்டுக்கு மணல் வார லாரி வரப்போறது. எல்லாருமா சேந்து தர்ணா செய்யணும். ஒரு சின்ன அசம்பாவிதம் கூட நடக்கவிடப் படாது. நாம ஜெயிக்கணும்னா நம்ம பொறுமையான எதிர்ப்புதான் பலமா இருக்கணும். போலீஸ் என்னென்ன செய்யும்னு சொல்ல முடியாது. எல்லாத்துக்கும் தயாரா இருக்கணும். தர்ணா செய்யவர்ற எல்லாரையும் அது கைது பண்ணலாம். அல்லது தர்ணாவுக்குப் பொறுப்பா இருக்கறவாளை மட்டும் கைது பண்ணலாம். காலகெடு இல்லாம காவல்லே வைக்கலாம். இதை நீங்க ஞாபகம் வச்சக்கணும். ஒங்கள்ளே யாராவது இந்த தர்ணாவுக்குத் தலைமைதாங்க முன்வரணும். அந்தத் தலைவர் கட்டளையை எல்லாரும் ஏத்துக்கணும். தலைமைதாங்க வர்றவா யாரு? எழுந்து நில்லுங்கோ!"

கூட்டத்தைப் பார்த்து அனந்தாச்சாரி கேட்டார்.

"ஐயய்யோ! இதென்னங்க ஆடி சீர்ல மலைப் பாம்பு!"

"பையன் வீட்டுல அதைக் கொண்டா இதைக் கொண்டா'ன்னு சொல்றப்ப.. அனகோண்டான்னு வாய்தவறி சொல்லிட்டாங்களாம்!"

– எஸ். மாலதி

---

கூட்டம் நிசப்தமாயிருந்தது. யாரும் எழவில்லை.

ஒரு நீல அம்பாசிடர் கார் கூட்டத்தின் ஓரமாக மெதுவாக ஊர்ந்து சென்று அதைக் கடந்தது.

எல்லாரும் அதைத் திரும்பிப் பார்த்தனர். நர்மதாவும் கவனித்தாள்.

திருவனந்தபுரத்துக்காரர்கள்!

கார் அவளருகே நகர்ந்து கடந்தது.

அவளை, மேடையில் நின்ற அனந்தாச்சாரியை, அந்தக் கூட்டத்தை, காரிலிருந்தவர்கள் தலைநீட்டி எட்டிப் பார்த்தார்கள்.

நான்தான் நீங்கள் பார்க்க வந்திருக்கிற பெண் என்று கார் நிறுத்திச் சொன்னால் எப்படி இருக்கும்? நர்மதா மனசிற்குள் சிரித்துக் கொண்டாள்.

கூட்டத்தில் வேறொரு இளைஞன் அப்போது எழுந்து நின்றான்.

"சர்தார்ஜி, என்னிக்கும் நீங்கதான் எங்க தலைவர். நீங்களே தலைமைவகிக்கணும்."

அவன் சொல்லி ஓய்ந்ததும் எழுந்த கைதட்டல் கூட்டத்தின் கருத்தும் அதுதான் என்று புலப்படுத்தியது.

மீண்டும் அனந்தாச்சாரி கூட்டத்தைப் பார்த்து இருகரம் தூக்கிக் கும்பிட்டார்.

"நீங்க என் பேர்ல வச்சிருக்கிற இந்த நம்பிக்கைக்கு என் பணிவான நன்றி. ஒங்க நம்பிக்கைதான் எனக்கு பலம். எப்பவும் அது நீடிச்சா இந்தக் காரியத்தை நாம ஜெயிச்சுடலாம்."

கூட்டத்தில் பலமான கைதட்டல். அது ஓய்ந்ததும் நர்மதா நாற்காலியில் இருந்து எழுந்து நின்றாள்.

"ஒரு நிமிஷம்" அவள் குரல் கணீரென்று ஒலித்தது. எல்லார் கவனத்தையும் அவள் மேல் ஈர்த்தது. அனந்தாச்சாரியும் திரும்பிப் பார்த்தார்.

"நர்மூ" என்று தொண்டை வரை வந்த அதிர்ச்சியை அவர் அடக்கிக் கொண்டார்.

"உனக்கு என்னம்மா வேணும்?" என்று சாதாரணமாகக் கேட்டார். தாத்தா பேத்தி பாத்தியதை வெளிப்படாத பொது தொனி அது.

"மேடையிலே பேசணும்."

"ஓ... வந்து பேசேன்."



நர்மதா மேடையேறினாள்.

"சுதந்தரத்துக்காகப் போராடிய தலைமுறையிடமே அதைப் பாதுகாத்தும் கொடுங்கள் என்று கேட்பது அநீதி. அவர்கள் சிறை சென்றது போதாது? அனுபவித்த கஷ்டம் போதாதா? இன்னுமா அவர்கள் பாடுபட வேண்டும்? அப்பா சம்பாதித்த சொத்தைக் காப்பாற்றியும் கொடுக்க வேண்டும் என்று பிள்ளைகள் எதிர்பார்ப்பது போல தாத்தாவிடம் பேரர்கள் எதிர்பார்ப்பதைப் போல என்ன கொடுமை இது? நம்மிடம் மானம் வீரம் தொலைந்து விட்டதா? எதற்குத் தயங்குகிறோம்? எதற்குப் பயப்படுகிறோம்? ஏன் உங்களில் ஒருவர் இதற்கு தலைமை ஏற்க முன்வரக் கூடாது?"

நர்மதா ஒரு நியாயத்தை ஆணித்தரமாகக் கேட்பது போலப் பேசினாள். உணர்ச்சி வேகத்தை விட உண்மையின் உறுதி தொனித்தது அவள் குரலில்.

கூட்டத்தில் அமைதி நிலவியது.

அனந்தாச்சாரி நிற்க முடியாமல் மேடையில் போட்டிருந்த நாற்காலியில் அமர்ந்தார்.

ஓரிரு நிமிஷங்கள் அந்த அமைதி நீண்டது. எவரும் எழுந்து நிற்கவில்லை.

"உங்கள் சார்பாக நானே இந்த தர்ணாவுக்குத் தலைமை ஏற்க முன்வருகிறேன். அதைத் தயவுசெய்து அனுமதியுங்கள்."

கூட்டத்தில் இப்போது கைதட்டல் வெகு பலமாக ஒலித்தது. இரண்டு மூன்று சீழ்க்கை ஒலிகளும் கேட்டன.

அனந்தாச்சாரியின் திகைப்பு அவர் முகத்தில் வெளிப்படையாகத் தென்பட்டது.

அவரைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் நர்மதா கூட்டத்தை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

"உங்கள் நம்பிக்கைக்கு என் பணிவான நன்றி. சர்தார் அனந்தாச்சாரி அவர்களை ஓய்வு பெறச் சொல்லி நாம் நிர்ப்பந்திக்கவில்லை. அவர்கள்தான் இதை இயக்கப் போகிறார்கள். சுமையை எங்கள் தோள்களுக்கும் மாற்றி வையுங்கள் என்றுதான் நாம் கேட்கிறோம்."

மீண்டும் கூட்டத்தில் பலத்த கைதட்டல்.

"என்னம்மா இப்படிப் பண்ணிட்டே?"

மேடையிலிருந்து இறங்கியதுமே அனந்தாச்சாரி கேட்டார்.

"தப்பா?"

"—"

"பேசாம நீங்க மாட்டிக்கோங்கன்னு விட்டிருந்தா அதான் தப்பு."

"திடீர்னு எமோஷனல் ஆயிட்டியோன்னு தோணித்து."

"இவ்வளவு முக்கியமான விஷயத்துக்கு மத்தவா மாதிரி நமக்கேன் வம்புன்னு ஜாக்கிரதையா இருந்துடச் சொல்றியா?"

நர்மதா இமையசையாமல், அவரைப் பார்த்துக் கேட்டாள்.

"அதில்லே... நீ பொண் கொழந்தே..." என்று ஏதோ சொல்ல வந்தார். சட்டென்று நிறுத்திக் கொண்டார்.

நர்மதா சிரித்தாள்.

"என்னம்மா சிரிக்கிறே?"

"நீ தாத்தாங்கிற ஞாபகமே போக மாட்டேங்கறது இல்லே."

'அடி பெண்ணே... நீ பாட்டியானால் அது புரியும்' மனசில் சொல்லிக் கொண்டார்.

வீட்டுக்குள் நுழைந்தபோது கூடத்து மின்விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது.

ஒரு சங்கடமான நிசப்தம் வீட்டைச் சூழ்ந்திருப்பதை அனந்தாச்சாரி உணர்ந்தார்.

வெளியே அந்த நீல அம்பாசிடர் இல்லை. எப்போது போயிற்று?

கூட்டத்தின் உணர்ச்சிமயமான மும்முரத்தில் அது போனதை இருவரும் கவனிக்கவில்லையா?

கூடத்தில் மஹாலக்ஷ்மி ஒரு பாயில் படுத்திருப்பது படி ஏறியதுமே தென்பட்டது. தலையைச் சுற்றி ஒரு டவலை இறுக்கக் கட்டியிருந்தாள்.

கையில் மூட்டையாய் முடிந்த ஒரு துண்டில் ருக்மிணி எதையோ எடுத்து வந்தவள் இருவரும் வருவதைக் கண்டு நின்றாள்.

புரிந்தது. மஹாலக்ஷ்மிக்கு மண்டையிடி. மணல் வறுத்து ஒத்தடம் கொடுக்க வந்திருக்கிறாள் மாமி.

செருப்பைக் கழற்றி ஓரமாக விட்டார் அனந்தாச்சாரி. உள்நடைத் திண்ணையில் உட்கார்ந்திருந்த கிருஷ்ணமாச்சாரி எழுந்து நின்றார்.

"என்ன கிருஷ்ணா... அவா வல்லியா?"

"வந்தா. வீட்டுக்கு உள்ற வல்லே. சித்த நாழி தெருத் திண்ணையிலேயே உட்கார்ந்திருந்துட்டு இப்ப சந்தர்ப்பம் சரியில்லே. அப்புறமா கடுதாசி போடறோம்னு கௌம்பிட்டா."

நர்மதா இருவரையும் கடந்து உள்ளே போனாள்.

(தொடரும்)



# ஆறாவது விரலுக்கு வேலை கொடுங்கள்!

"உனக்கு டைரக்டராக வேண்டும் என்ற ஆசை இருந்தால் முதலில் திரைக்கதை எழுதிப் பழகு என்று என் குருநாதர் சொன்னார். ஆனால் அதிகாலை, வேலை தொடங்கினால் நள்ளிரவு ஆகும், ஷூட்டிங் முடிய. இதில் நான் எங்கே திரைக்கதை எழுதிப் பழகுவது? ஆனாலும், படுக்கப் போவதற்கு முன் பத்து நிமிஷமாவது தினமும் எழுதிவிடுவது என்று ஒரு வைராக்கியம் வைத்துக் கொண்டேன். இரவு படுக்கைக்கு வர எத்தனை நேரம் ஆனாலும் சரி. உடல் துவண்டு, கண் செருகி விழுந்தாலும் சரி... படுப்பதற்கும் உறங்குவதற்கும் இடையிலான சில நிமிடங்களிலாவது ஓரிரு பக்கங்கள் தினமும் எழுதிவிட்டுத்தான் படுப்பேன். இந்தப் பழக்கம் பின்னால் எனக்கு வெகு உபயோகமாக இருந்தது."

– உலகப் புகழ் பெற்ற ஜப்பானிய இயக்குநர் அகிரா குரசோவா 'Something like an autobiography' என்ற தம் நூலில் குறிப்பிட்டிருப்பது இது. இது சுமார் இருபது வருஷங்களுக்கு முற்பட்ட சமாசாரம். இந்தக் கட்டுரைக்காகச் சமீபத்தில் நாம் சந்தித்த சஃபி என்கிற, சி.ஐ.டி. நகரில் ஜெராக்ஸ் கடை வைத்துள்ளவர் சொன்ன தகவல் கீழே :

"பள்ளிக்கூடப் பையன்கள் – சுமார் 12 – 16 வயசுக்காரர்கள் இப்போதெல்லாம் அடிக்கடி ஜெராக்ஸ் எடுக்க வருகிறார்கள். அவர்களுக்கு என்ன ஜெராக்ஸ் எடுக்கிற அவசியம்? ஒருநாள் பள்ளிக்குப் போகாவிட்டால், அன்று ஆசிரியர் தந்த நோட்ஸை – எழுதிய பையன்களிடம் கேட்டு வாங்கி வந்து இவர்கள் ஜெராக்ஸ் எடுத்துக் கொண்டு விடுகிறார்கள். சமீபத்தில் இப்படி ஜெராக்ஸ் எடுக்க வந்த ஒரு பையன், வெறும் அரைப்பக்க நோட்ஸை நீட்டி, எடுத்துத் தரக் கேட்டான். நான், 'அரைப் பக்கம்தானே? நீயே எழுதிக்கக் கூடாதா?' என்று கேட்டதற்கு அவன் சொன்ன பதில் என்ன தெரியுமா? 'இதுக்கெல்லாம் ஏது சார் டயம்!'

பேனா பிடித்து எழுதுகிற பழக்கம் போயே போச்சு! டைப்ரைட்டர் வந்து, அது வயசுக்கு வந்து எலக்டிரானிக் டைப்ரைட்டராகி, அதற்குக் கல்யாணமாகி பர்ஸனல் கம்ப்யூட்டர் குழந்தையும் பிறந்து, அந்தச் சன்னை கூட வேண்டாம்; வெறுமனே டிக்டேட் பண்ணினால் ஃபீட் ஆகிவிடக்கூடிய வாய்ஸ் மெயில்கள் வலம் வரத் தொடங்கிவிட்டன. 'பேனா பிடிச்சு எழுதி என்

• டாக்டர். சுரேஷ்குமார்



னத்தைக் கிழிக்க?' என்று உலகமே கேட்கையில், இன்னமும் கையால் எழுதுகிற வழக்கத்தை விட்டொழிக்காத சில மகானுபாவர்களைச் சந்திக்கத் தீர்மானித்தோம்.

• பாலு

• [illegible]

• படம் : ஸ்ரீஹரி

"என்ன வந்து என்ன சார்? அஃபிடவிட், பெட்டிஷன், ரிட், மெமோன்னு ஒரு நாளைக்கு இருபது பக்கம் வரைக்கும் எழுதிட்டுத்தான் இருக்கேன்" என்கிறார் சைதை கோர்ட்டில் வழக்கறிஞராக இருக்கும் பாலு.

"எலக்டிரானிக் டைப்ரைட்டருக்குக் கரன்ட் இருக்கணும். நம்ம அவசரத்துக்கு எப்பவும் எம்.ஈ.எஸ்ஸை நம்பிட்டிருக்க முடியுமா இங்கே? அதான், எழுதிடறதே பெஸ்ட்" என்கிறார் இந்த லாயர். (ஹை கோர்ட் வளாகத்தில் கொஞ்ச நாள் முன்பு வரை பத்திரம் எழுதித் தர ஒரு கோஷ்டி சுற்றிக் கொண்டிருக்கும். இப்போது ஏனோ இல்லை!)

சென்னை புறநகர் போலீஸ் நிலையம் ஒன்றில் ரைட்டராக இருக்கிற (பெயர், ஊர் வேணாம் என்கிறார்.) ஒருவரைச் சந்தித்தபோது, "நான் ரைட்டர்தான். ஆனா அப்படிச் சொல்லிக்கிட்டா அது நாட்டுல இருக்கற நல்ல ரைட்டருங்களுக்கெல்லாம் பெரிய இன்ஸல்ட்டு! என்னா சார் நாய்ப் பொழப்பு! ஸ்டேட்மென்ட் எழுதற வேலைதான். மாங்கு, மாங்குன்னு ஒரு நாளைக்குக் குறைஞ்சது முப்பது பக்கம் எழுதணும். அது பிரச்னை இல்லை. ஆனா மனசாட்சிக்கு விரோதமா வேலை செய்ய வேண்டி இருக்குதுங்க..." என்றார் சலிப்புடன்.

விஷயம் என்னவென்றால் அந்த ஏரியா, சாராயத்துக்குப் பேர் போன, (கம்போஸர், இந்த இடத்தில் கண்டிப்பாக கமா போடவும்.) ஆழ்வார் ஒருவரால் பாடல் பெற்ற பிரதேசத்தை உட்கொண்டது. எஸ்.ஐயாக இருக்கப் பட்டவருக்கு பகுதிவாழ் சாராயர்களில் பலருடன் விரோதம். (மாமூலான காரணம்தான்.) ஸ்டேஷனுக்கு என்ன மாதிரி கம்ப்ளெயின்ட் வந்தாலும், தனக்கு விரோதியான நபர்களை ஏதாவது வகையில் சம்பந்தப்படுத்தி ரிப்போர்ட் எழுதச் சொல்வாராம் – சம்பந்தமே இல்லாவிட்டாலும்.

"இதுல என்ன சோகம்னா, கம்ப்ளெயின்ட் குடுக்க வர்றவனுக்கு இவரு சொல்ற ஆசாமியோட பேர் கூடத் தெரிஞ்சிருக்காது. 'அவுரு இல்லீங்க... அது வேற யாரோ, என்று மறுத்தால் 'நீ சும்மா இருய்யா. உன் கம்ப்ளெயின்டை எடுத்துக்கணுமா, வேணாமா'ன்னுவாரு. எல்லா எழவையும் நான்தான் எழுதியாகணும்..."

"எழுதறது போர் அடிக்குதுங்களா?"

"போராவது கிராவது. சோறு சாமி!"

சகட்டுமேனிக்கு க், ச், ப்களை மேட்டரில் தேவையில்லாத இடங்களில் கூட வாரி வழங்கியிருக்கும் அவரது ஒரு சாம்பிள் ரிப்போர்ட்டைப் பார்த்துவிட்டு, "எழுத்துப் பிழை பத்தியெல்லாம் உங்க எஸ்.ஐ. கேக்க மாட்டாருங்களா?"

"பெரும்பாலும் அவரு படிக்கறதே இல்லீங்க. கேட்டுக்கறதோட சரி."

வருஷக்கணக்காக மாய்ந்து மாய்ந்து டைரி எழுதுகிற பிரகிருதிகள் நாட்டில் அநேகர் இன்னமும் இருக்கிறார்கள். ஆறு மணிக்கு எழுந்தேன். ஹார்லிக்ஸ் சாப்பிட்டேன் என்று தொடங்கி, அன்றைய அலுவல் முழுவதையும் ரிப்போர்ட்டாக வடிக்கிற கோஷ்டியில் இருவரைப் பிடித்தோம்.

"டைரின்னா, உண்மை எழுதணும். இளவயசுப் பசங்க அவங்கவங்க 'உண்மை'களை எழுதினால், வீட்டுல படிச்சுட்டு டின் கட்டிடுவாங்க. இது என் அனுபவம். அதான் எழுதறதை இப்ப விட்டுட்டேன்..." – இது ஓர் இளம் பத்திரிகையாளரின் இதுவரை பிரசுரமாகாத ரிப்போர்ட்.

"டைரி எழுதறது ஒருவித வடிகால். பின்னால நம்மை நாமே படிச்சுப் பார்த்துக்கறது, பழைய கல்யாண போட்டோ ஆல்பம் புரட்டற சுகம்"



• பட்டுக்கோட்டை பிரபாகர்



• அனுராதா ரமணன்



• சுஜாதா

என்கிறார் வி. மூர்த்தி என்கிற பி.டபிள்யூடி. சூப்பரின்டென்டென்ட். (எத்தனை டென்?)

டைரி என்றல்ல; எழுதுவதே ஓர் ஆரோக்கியமான மனப்பழக்கம்தான் என்கிறார்கள் மனநல மருத்துவர்கள். பேச்சு, விவாதம் போன்றவற்றை விட ஒரு கருத்தை எழுத்து மூலம் வடிக்கிற போதுதான் அதன் வடிவம் முழுமை பெறுகிறது. மிகுந்த மன அழுத்தம்; மன இறுக்கத்தில் இருக்கிற போது நம்மை அத்தகைய அழுத்தத்துக்கு உள்ளாக்குகிற விஷயத்தை சுமார் பத்து வரிகளில் எழுதி வைத்துவிட்டால் பாரம் குறைந்து விட்ட மாதிரி இருக்குமாம்.

"எங்களிடம் ட்ரீட்மென்ட்டுக்கு வர்றவங்களை முதல்ல, 'உங்க பிரச்னையை எழுத்து மூலமா எழுதிட்டுவாங்க'ன்னுதான் சொல்றது வழக்கம்" என்றார் மனநல மருத்துவர் சுரேஷ்குமார்.

"மனுஷ மனம்ங்கறது பலூன் மாதிரி. ஊத ஊத விரிஞ்சிட்டே இருக்கும். ரொம்ப அழுத்தம் கொடுக்கும்போது ஒரு கட்டத்தில் வெடிச்சுடும். அப்படி வெடிக்காம இருக்கத்தான், நம்மை நாமே பார்த்துக் கொள்ளும்படியாத்தான் 'எழுத்து' அமையுது. அது ஒரு வென்ட்டிலேஷன். எழுதும் போது பிரச்னைக்கு ஒரு வடிவம், நோக்கம், ஆழம், கால கட்டம் கிடைக்குது. நிறைய டீடெயில்ஸ் தரோம். இதனால் என்ன ஆகுதுன்னா, விஷயத்தை உள்நோக்கிப் பார்க்கறோம். அதனால சுலபமா தீர்வு வெளியே வந்துடும். ரொம்ப முக்கியமான விஷயம் - பேச்சை விட எழுத்து வடிவத்துல கூடுதலா உண்மையைச் சொல்ல ஒரு வாய்ப்பு உருவாகிறது" என்கிறார் சுரேஷ்குமார்.

சுரேஷ்குமார் சொன்ன ஓர் ஆச்சர்யமான தகவல், சராசரி மக்களை விட எழுத்தாளர்களுக்கு மனவலிவு ஜாஸ்தி! காரணம் அவர்கள் இடைவிடாமல் எழுதுவதுதானாம்!

இதை அப்படியே விட்டு விட முடியுமா? உடனே சில எழுத்தாளர்களைத் தொடர்பு கொண்டு 'எழுத்துப் பழக்கம்' பற்றிக் கேட்டோம்.

"எழுத்து என்கிற மீடியமே கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துவிடுமோன்னு பயமா இருக்கு!" என்று சொல்லி, திடுக்கிட வைத்தார் அனுராதா ரமணன்.

"முன்னெல்லாம் என் சின்னப் பெண் கனடாவிலிருந்து லெட்டர் அனுப்புவாள். இப்ப ஃபோன் தான் பண்ணுகிறாள். லெட்டரை திரும்பத் திரும்பப் படிச்சி மகிழலாம். போனில் எப்படி...?" என்றவர், நிறைய வாசகர்களுக்கு பதில் எழுதச் சோம்பி, ஒன்று எழுதி ஜெராக்ஸ் எடுத்து அனுப்பி விடுகிறாராம், ஒரே மாதிரி விஷயமாக இருந்தால். "ஆனா, எனக்கு ஏதாவது ஜெராக்ஸ் லெட்டர் வந்தால் மட்டும் பிடிக்கிறதில்லை!"

"என்னால் பேச முடியாமல் படுக்கையில் இருந்தபோது மட்டும் பேசிப் பழக, கதைகளை டிக்டேட் செஞ்சேன். மத்தபடி மெல்லிசு பேப்பர்ல, கறுப்பு கேமல் இங்க்கால எழுதறதுதான் வழக்கம். தினம் மாலை ஆறுலேருந்து ராத்திரி ஒரு மணி வரைக்கும் மிக்சரோ, வெங்காய பகோடாவோ கொறிச்சிக்கிட்டே எழுதுவேன். மெல்லிசா ம்யூஸிக் இருந்தா பரமசந்தோஷம்!" என்கிறார் அனுராதா ரமணன்.

"எழுத்து மீடியம் மறைஞ்சுடுமோ" என்று அ. ரமணன் பயந்ததற்கு நேர்மாறான கருத்தை வைத்திருக்கிறார் சுஜாதா.

"எழுத்துத் தேவை மாறவே மாறாது. உலகின் முழு டேட்டா பேஸுமே எழுத்துதான்" என்றார்.

அவர் கம்ப்யூட்டரில் எழுதுவது பற்றிக் கேட்டபோது, "அதில் அடித்தல், திருத்தலெல்லாம் சௌகர்யம். அழகான, அச்சுப்பிழை இல்லாத பிரின்ட், மோசமான கையெழுத்தை மறைக்கும்" என்று சொன்னார்.

"நான் தமிழ் டைப் கற்றுக் கொண்டேன். வீட்டில் ஒரு பி.ஸி. வேறு வாங்கிப் போட்டேன். ஆனாலும் கதைகளைக் கைப்படத்தான் எழுதறேன்" என்றார் பட்டுக்கோட்டை பிரபாகர்.

"கருவி மூலம் கதை எழுதினால் சிந்தனை ஓட்டம் தடைபடுது. கவனம் கம்ப்யூட்டர் மேல நிற்குது. அதை ஒழுங்கா இயக்கணுமேங்கற கவலை. நல்ல காலம், என் கையெழுத்து பார்க்கும்படியா இருக்கறதால், பேசாமல் உட்கார்ந்து எழுதிடறேன்" என்கிறார்.

"எழுத, சூழ்நிலை எப்படி தேவைப்படுகிறது?"

"தனிமையும் அமைதியும் உலவினால் உத்தமம். மற்றபடி டீவி ஓடிக் கொண்டிருக்க, குழந்தை கத்திக் கொண்டிருந்தாலும் எழுத்து தடைபடாமல் ஓடும்!"

தொழில்ரீதியில் எழுதியே ஆகவேண்டியவர்கள் இருக்கட்டும். சாதாரணர்கள் கூட ஒரு நாளைக்கு நாலு வரியாவது ஏதாவது எழுதுவதென்பது தியானத்துக்கு ஒப்பான விஷயம் என்கிறார்கள் மனநல மருத்துவர்கள். விடாமல் ஒரு நாளைக்கு 108 ஓம் முருகா எழுதுகிற ஒரு பெண்மணி, அந்தப் பதினஞ்சு நிமிஷம், என் கவலையெல்லாம் டாட்டா சொல்லி விடுகின்றன என்கிறார். வாசகர் கடிதம் எழுதுகிற வளர்மதி ஆசைத்தம்பி, அய்யாறு வாசுதேவன், அரவக்குறிச்சிப்பட்டி அசோக்ராஜா, கும்பகோணம் எஸ்.கே. மூர்த்தி, கருப்பம்புலம் சித்ரவேலு எல்லாரும் கூட இதையேதான் சொல்வார்களாயிருக்கும்.

**- கிச்சா, குல்லூ**

அட்டை வண்ணப்படம் : **யோகா**

மாடல் : **பார்கவி**

# தேசியப் பாதையில் திராவிடம்!



நடந்து முடிந்த சுதந்தர தின பொன்விழா கொண்டாட்டங்கள். தமிழகத்தைப் பொறுத்த வரை பல ஆச்சர்யங்களைக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறது. குறிப்பாக தி.மு.க. மற்றும் அதன் தலைவர் கலைஞரின் வரவேற்கத்தக்க செயல்பாடுகளைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியாது.

பொன்விழாக் கொண்டாட்டங்களை ஒட்டி, 'சமத்துவபுரம்' என்னும் காலனிகள் கட்டப்பட்டு அங்கே சகல பிரிவினரும் குடிவைக்கப்படுவார்கள் என்ற அறிவிப்பை வெளியிட்டார் கலைஞர். இது தவிர ஆதி திராவிடர் வீட்டிற்கே சென்று சமபந்தி போஜனம் செய்யும் திட்டத்தையும் வெளியிட்டார். இந்த இரு அறிவிப்பையும் கேட்ட பழைய, பழைய காங்கிரஸ்காரர்களுக்கு ஒரே ஆச்சர்யம். ஏனென்றால் இவையிரண்டும் அந்தக் கால காங்கிரஸின் 19 அம்ச நிர்மாணத் திட்டங்களில் சொல்லப்பட்டிருந்ததுதான். காங்கிரஸ் உறுப்பினர் கார்டின் பின்புறம் இவை அச்சடிக்கப்பட்டிருக்குமாம். அதைத் தான் இன்று கலைஞர் தூசிதட்டி எடுத்துக் கொண்டிருக்கிறாராம். புதிய காங்கிரஸாருக்கு இது தெரிய வாய்ப்பில்லையாம்.

அடுத்ததாக கட்சி ரீதியாக சுதந்தர தினத்தைக் கொண்டாடியது. தி.மு.க. கட்சியின் வரலாற்றில் முதல் முறையாக தி.மு.க. தொண்டர் அணியினர் 1050 மீட்டர் நீளமுள்ள தேசியக் கொடியைக் கைகளில் ஏந்தி ஊர்வலம் சென்றனர். ஊர்வலத்தை அண்ணா சமாதியில் துவக்கியவர் கலைஞர். அந்த 'கின்னஸ்' கொடியை ரிப்பன் பில்டிங்கில் வாங்கிக் கொண்டவர் ஸ்டாலின். ஒரு பேட்டியில், "எனக்கு இந்தியன் என்ற உணர்வு மேலோங்கி இருக்கிறது" என்றும் சொல்லியிருக்கிறார் கலைஞர். அண்ணா சமாதியில் தேசியக் கொடி ஊர்வலம் துவக்கப்பட்டதற்குப் பல அர்த்தங்கள் உண்டு. (அண்ணாவின் திராவிட நாடு கொள்கையை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்!)

எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்த மாதிரி ஐம்பது தியாகிகளை, தமிழக அரசு சார்பில் டெல்லிக்கு அழைத்துச் சென்று வந்ததை மிகப் பெருமையாக சிலாகிக்கிறார்கள் தியாகிகள். புறப்படும் போது விழா நடத்தி, அவர்களை கௌரவப்படுத்தியதோடு மட்டுமல்லாமல், பயணத்தின்போது

எல்லா சௌகரியங்களையும் கவனித்து, டெல்லியில் வசதிகளைச் செய்து, வயதான அவர்களைக் குழந்தைகள் போல் பார்த்துக் கொண்டது தமிழக அரசு. டெல்லியில் தி.மு.க. அமைச்சர் டி. ஆர். பாலுவும் தி.மு.க. எம்.பிக்களும் வரவேற்றார்கள். தியாகிகள் வழியனுப்பும் விழாவின்போது, மூத்த காங்கிரஸ் தியாகி செங்கல்வராயன் காலில் விழப் போனார் முதல்வர்.

''சுதந்தரத் தியாகிகளின் வரலாற்றை நானே எழுதுவேன்'' என்று சொன்னதன் மூலம், அவர்களின் தியாகத்தின் மேலுள்ள தமது அக்கறையைக் காட்டியிருக்கிறார். தியாகி விஸ்வநாததாஸ் இல்லத்தை அரசு நினைவுச் சின்னமாக மாற்றும் என்றும் சொல்லியிருக்கிறார். தியாகிகளுக்கான உதவிப் பணத்தையும் இரட்டிப்பாக்க இருக்கிறதாம் தமிழக அரசு.

ஒரு காலத்தில், தமிழ், தமிழர் நலன் என்று பிராந்திய நலனே முக்கியக் குறிக்கோளாக தி.மு.கவுக்கு இருந்தது. அந்தக் குறிக்கோளில் பெரிய அளவில் மாற்றம் ஏதும் இல்லாமல் இருந்தாலும், வயது தந்த கனிவு + பக்குவத்தின் காரணமாக, தமது கண்ணோட்டத்தை சற்றே விரிவுபடுத்தி இருக்கிறார் கலைஞர் என்பது அவரது செயல்பாட்டிலிருந்து புரிகிறது. இது ஒரு வரவேற்கத்தக்க மாற்றம்தான் என்பதில் சந்தேகமில்லை. திராவிடம் தேசியமாகிக் கொண்டிருக்கும் இந்த நிலையில், தேசிய எண்ணங்கொண்ட காங்கிரஸ்காரர்கள், ''மாநில காங்கிரஸ்'' என்ற அளவில் சுருங்கிப் போயிருக்கும் நிலையும் பளிச்சென்று தெரிகிறது. ''சென்னையிலிருந்து செல்லும் போதும், டெல்லியிலும் தி.மு.க. அமைச்சர்கள், எம்.பிக்கள் ஆகியோர் வந்திருந்தார்கள். ஆனாலும் தமிழ் மாநிலக் காங்கிரஸைச் சேர்ந்த எந்த முக்கியஸ்தரும் வரவில்லை'' என்று வருத்தத்துடன் சொன்னார் மூத்த தியாகி ஒருவர்.

''தி.மு.க.வுக்கு நாட்டுப் பற்றே கிடையாது; ஒருமைப்பாட்டுக்கு அவர்கள் எதிரி'' என்றெல்லாம் அவ்வப்போது குற்றச்சாட்டுக்கள் வீசப்படுவது உண்டு. கலைஞரின் இதுபோன்ற செயல்பாடுகள் தொடர்ந்து இருக்குமானால் அப்படிப் பட்ட குற்றச்சாட்டுக்களுக்கு இனி இடமே இருக்காது.

– ப்ரியன்

# பிரேமானந்தா வழக்கு:

அதிகாரவர்க்கம் அரசியல் அமைப்புகள் ஆகியவற்றின் மீது மக்கள் நம்பிக்கை இழந்திருக்கிற காலத்தில், ஒரு சராசரி இந்தியக் குடிமகன் வெளிப்படுத்த முடியாத ஆதங்கத்தை- அவனுக்குச் சட்டத்தின் மீதுள்ள நம்பிக்கையை- இந்த நான்கைந்து ஆண்டுகளாக உச்ச நீதிமன்றம் முதல் கீழ் நீதிமன்றம் வரை வெளிப்படுத்த ஆரம்பித்திருப்பது இந்திய ஜனநாயகத்தின் பாதையில் தெரியும் ஆரோக்கியமான அம்சம். இதுதான் பிரேமானந்தா வழக்கின் தீர்ப்பைப் பத்திரிகைகளில் படித்ததும் எனக்குத் தோன்றிய எண்ணம்.

மற்ற நாடுகளைப் போலல்லாமல் இங்கு சட்டத்தின் மேலாண்மை, அதிகாரத் தொடர்புடையவர்கள், அயோக்கியர்கள், பண முதலைகள் ஆகியோரைத் தொட முடியாத நிலை இருந்து வந்திருக்கிறது. இந்த நிலை மாறி, தவறு செய்தவர்- அவர் எத்துணை செல்வாக்குப் பெற்றிருப்பினும்- பணபலம் வைத்திருப்பினும்- தண்டனை அடைந்தே தீருவான் என்பதை இந்தத் தீர்ப்பு மீண்டும் தெளிவுபடுத்தியிருக்கிறது.

பிரேமானந்தாவுக்கு இரட்டை ஆயுள் தண்டனையும், 66 லட்சம் அபராதமும், அந்த அபராதத்தைக் கட்டத் தவறினால் மேலும் 32 வருட தண்டனையும் விதித்து நீதிபதி தீர்ப்பு கொடுத்திருப்பதில் தவறேதும் கிடையாது. ஒரு தனிநபர் கண்ணோட்டத்தில் இருந்து இந்த தண்டனையைப் பார்க்காமல், இந்தத் தீர்ப்பு உண்டாக்கக் கூடிய சமூக ஒழுக்கத்தின் பாஸிடிவ்வான விளைவைப் பார்க்க வேண்டும்.

கிரிமினல் சட்டம் என்பது குற்றவாளியைத் தண்டிப்பதோடு நின்று விடும். கொலைகாரனுக்குத் தண்டனை கிடைத்து விடுகிறது. கொலையுண்டவர் குடும்பத்தை யாராவது நினைத்துப் பார்க்கிறார்களா? பாலியல் பலாத்காரம் செய்யப்பட்ட பெண்ணுக்கு உண்டாகும் மன உளைச்சலுக்கு அளவே கிடையாது.



• பிரேமானந்தா

## "இதுவொரு முன்னோடியான தீர்ப்பு!"

இதற்கெல்லாம் என்ன நிவாரணம்? இந்த நிலையை மிகச் சரியாகவே புரிந்து கொண்டு, பாதிக்கப்பட்ட 13 பெண்களுக்கு நிவாரணமாக, பிரேமானந்தாவுக்கு அபராதம் விதித்து வசூலித்துக் கொடுக்க, தீர்ப்புச் சொன்ன நீதிபதியை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இன்னமும் சரியாகச் சொல்லப் போனால் பாதிக்கப்படுவோருக்கு நஷ்ட இழப்பீடு என்பது நடைமுறையில் அமுல்படுத்தப் படாமல் இருக்கின்ற இன்றைய கட்டத்தில், குறிப்பறிந்து, தேவையறிந்து ஆறுதல் கொடுத்திருக்கிறது இந்தத் தீர்ப்பு. அந்த வகையில் இதுவொரு முன்னோடியான தீர்ப்பு என்றும் சொல்லலாம். பல ஐரோப்பிய நாடுகளைப் போல இங்கு இது போன்ற வழக்குகளில் பாதிக்கப்பட்டோருக்கு உதவ, நிதி உதவி அமைப்புகள் (State aid) இல்லை. எனவே குற்றவாளியிடமே அபராதமாக ஒரு தொகையை வசூலிப்பது சட்டத்துக்குட்பட்ட சரியான செயலாகும்.

இந்த வழக்கில் சில அரசுத் தரப்பு சாட்சிகள் பல்டியடித்திருக்கிறார்கள். ஒரு குற்றத்தை குற்றவியல் சட்டப்படி நிரூபிக்க வேண்டுமென்றால், எந்தக் குற்றத்தையும் நிரூபிக்க முடியாது. எனவே, ஒட்டுமொத்தப் பார்வையில் குற்றம் புரிந்ததற்கான சூழ்நிலை சாட்சியங்கள் இருக்குமேயானால், சமுதாயத்தை உலுக்குகின்ற இதுபோன்ற குற்றம் புரிந்தவர்களைத் தப்பிக்க விடக் கூடாது என்பதையும் உணர்த்துகின்ற தீர்ப்பு.

ஒரு பெண் நீதிபதியாக இருப்பதால்தான் மிகவும் அதிகபட்சமான தண்டனை கொடுத்திருக்கிறார் என்பது தவறான சிந்தனை. இப்படி யாராவது சொன்னால் அது மிகவும் குறுகலான வாதம். பாலியல் பலாத்காரக் குற்றத்துக்கு, ஏழு முதல் பத்தாண்டுகள் வரை தண்டனை கொடுக்கலாம். அந்த வகையில் 13 பெண்களை சட்டத்துக்குப் புறம்பாக அடைத்து வைத்து பலாத்காரம் செய்ததற்கு எவ்வளவு தண்டனை கொடுக்கலாம் என்பதை யோசித்துப் பாருங்கள்.

— வழக்கறிஞர்

**கே.எம். விஜயன்**



பேட்டி: ஸ்ரீநிவாசன்

# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

''வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக நேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்ப்பணிக்க வேண்டும்'' என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்ரார்தன : ஸுமங்கலி ப்ரார்த்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

MAY VEDA MATHA BLESS US ALL

# 3

**ப**ம்பாய்ல இருந்தப்போ ஒருநாள் எங்க எல்லாரையும் 'கேட் வே ஆஃப் இந்தியா'வுக்கு பிக்னிக் போல கூட்டிக்கிட்டுப் போனாங்க. எங்க கம்பெனியில அதுதான் விசேஷம். எந்த ஊர்ல கேம்ப் போட்டாலும் அங்க இருக்கிற கோயில், குளம், விசேஷமான இடங்களுக்கு எல்லாரையும் கூட்டிப் போய்க் காட்டுவாங்க.

'கேட் வே ஆஃப் இந்தியா'வில இருந்தப்போ எங்க முதலாளி தமிழ்ல 'தா'...ங்கற எழுத்தோட ஆரம்பிக்கிற 'நல்ல' வார்த்தையைச் சேர்த்து (இந்த மாதிரி வார்த்தைங்க அவர் வாயில சரளமா வரும்) 'எங்கேடா அந்த தா.... நம்பியாரு?' அப்படீன்னு கேட்டிருக்கார். நான் போய் அவர் முன்னாடி நின்னேன்.

"ஏண்டா ராஸ்கல்... என்னமோ ஊருக்கு போவணும்னு அடம்பிடிச்சியே... போயிருந்தா இந்த மாதிரி எடங்களைப் பாத்திருப்பியா? நல்லா பார்டா.. இங்கேதான் மூதன் முதல்ல வெள்ளைக்காரன் வந்து எறங்கினான், தெரிஞ்சுக்கோ..."

நான் மனசுக்குள்ளாற சிரிச்சிக்கிட்டேன். ஏன்னா, எனக்கு ஹிஸ்டரின்னா பைத்தியம். வரலாற்று விவகாரங்களை நல்லா தெரிஞ்சி வச்சிப்பேன்.

வாஸ்கோடகாமாதான் முதல்ல காலிகட் பக்கத்தில பேப்பூர் அப்படீங்கற இடத்தில 1498ல வந்து இறங்கினான்ற சரித்திரம் எனக்குத் தெரியும். ஆனா அதை அங்கே சொல்ல முடியுமா? சொன்னா முதுகு வீங்கிடுமே! பேசாம இருந்தேன்.

'அதோ பார்ரா...' ஒரு பெரிய கட்டடத்தை வாத்தியார் கட்டிக் காமிச்சார்.

"அதுதான் தாஜ்மஹால் ஹோட்டல். தெரியுமா? டேய்... கையில அஞ்சு ரூபா இருந்தா கூட அங்க போயி டீ குடிக்க முடியாதுடா.. அவ்வளோ விலை. இன்னொன்னு தெரியுமா... அங்கே வேஷ்டி கட்டிக்கிட்டு போனா உள்ளார விட மாட்டாண்டா..."

இரண்டாவது சொன்னாரே, அதப்பத்தி நான் கவலைப்படலே. ஏன்னா எனக்கு எப்பவுமே வேஷ்டி கட்டிப் பழக்கமில்லை. டிராமா கம்பெனியில சேர்ந்த போது கூட நான் கோட்டு, பாண்ட் போட்டுதான் நுழைஞ்சேன். முதல்ல சொன்னாரே டீ விவகாரம், அதுதான் என்னை கவலைப் படுத்திச்சி. நான் எப்போ அஞ்சு ரூபாய்க்கு மேல சம்பாதிச்சு தாஜ்மஹால் ஹோட்டல்ல போய் டீ சாப்பிடப் போறேன்னு ஏகமா கவலை. அப்போ 1935ல இந்தக் கதை. இப்போ 97. இன்னும் நான் தாஜ்மஹால் ஹோட்டல்ல டீ சாப்பிடல்லே. பல தடவை பாம்பே போயிருக்கேன். என்னமோ அந்த ஹோட்டல்ல தங்கற சான்ஸே கெடக்கல்லே.



• படம் : யோகா

# நான் வில்லன்

**தா**தர் போய் அடிக்கடி சடுகுடு விளையாடுவோம்.

ஒரு தடவை சொல்வார் பேச்சைக் கேட்டு எனக்கு ஒரு பெரிய சோதனை வந்தது. எல்லாம் என்னோட புத்தி கெட்டதனம்தான் காரணம்.

கபடி விளையாடறப்போ எதிர் அணியில கோவிந்தராஜன்னு ஒருத்தர் நின்னு விளையாடினாரு. அவரு வேற யாருமில்லை. எங்க வாத்தியாருடைய சாட்சாத் தம்பி. எல்லாரையும் அதட்டி மிரட்டி சுத்திகிட்டிருப்பாரு. எங்க டீம்ல எத்திராஜ்னு ஒருத்தர். அவருக்கு

கோவிந்தராஜ் மேல ஒரு கரம். 'டேய்... அவனை உட்டுறக் கூடாதுடா. தூக்கிப் போடுடா' என்று என்னை உசுப்பி விட்டார்.

கோவிந்தராஜ் எங்க பக்கம் ஏறி வந்தபோது நான் அவரை நோக்கிப் போனதும் அவர் திரும்பிட்டாரு. அப்புறம் நான் அவங்க ஏரியாவுக்குப் போவணும். கபடி... கபடி... கபடின்னு நான் அவங்களை நோக்கிப் போனேன். அவருகிட்ட போனதும்– எவரு? கோவிந்தராஜ் – 'ஏய்... வாணான்டா.. எங்கிட்ட வராதே. நான் உதைச்சிடுவேன்'னு சொன்னார். எனக்கு அதெல்லாம் காதுலேயே விழல்ல. எத்திராஜ் சொன்ன 'அவனை விடாதே... தூக்கிப் போடுடா'தான் மந்திரமா காதுலேயே இருந்தது. அவ்வளவுதான். வெறிபிடிச்சாப் போல கோவிந்தராஜை குண்டுக்கட்டா தூக்கி வந்து கோட்டில போட்டேன். ஒரே கிளாப்ஸ். நான் அந்த நிமிஷத்துக்கு ஹீரோ ஆயிட்டேன். இதனோட விளைவு என்னாச்சுன்னா அப்புறமா ஒரு வருஷத்துக்கு நான் கோவிந்தராஜ்கிட்ட அடி, உதை, திட்டு வாங்கிட்டே இருந்தேன். முதலாளியோட தம்பியாச்சே! எத்திராஜ் பேச்சைக் கேட்டு நான் அப்படி அவரோட மோதி இருக்கக் கூடாதுதான். என்ன செய்ய? அப்போ என் புத்தி அவ்வளவுதான். இப்ப மட்டும் என்ன வாழுது?

தஞ்சாவூர்ல கம்பெனி இருந்தப்போதான் எங்க வாத்தியாருக்குக் கல்யாணம் ஆச்சு. ரொம்ப 'கிராண்டா' பண்ணாங்க. அது மட்டுமில்ல. பத்து பன்னிரண்டு பேர் பங்கு

# அல்வே!

## எம். என். நம்பியார்

தாரரா இருந்த டிராமா கம்பெனி 'ராஜமாணிக்கம் கம்பெனி'ன்னு எங்க வாத்தியாருக்குச் சொந்தமா ஆனதும் அங்கேதான். அப்ப கம்பெனிக்கு பதினேழாயிரம் ரூபா கடன் இருந்தது. யார் குடுக்கறதுன்னு வந்தப்போ, எல்லா பார்ட்னர்ஸும் ஒதுங்கிட்டாங்க. 'நான் கடனை அடைக்கிறேன்'னு எங்க வாத்தியார் முன்வந்தார். அப்படித்தான் கம்பெனி அவருக்குச் சொந்தமாச்சு. மத்தவங்க அவரு கூட கம்பெனியில இருந்து வந்தாங்க. இருந்தாலும் வெளியே காமிக்காத விரோதியாயிட்டாங்க.

தஞ்சாவூர்ல டிராமா போட்டா கலெக்ஷனே ஆகாது. அப்படி ஒரு ராசி. எப்ப ஆவும்னா, அறுவடை சமயத்தில அவங்க நெல் போர் அடிக்கற இடத்துக்கே போய் போட்டா ஏதோ கொஞ்சம் கலெக்ஷன் ஆகலாம். ஆனா அதுக்கு எங்க கம்பெனி லாயக்கில்ல. ஏன்னா நாங்கள்லாம் ஸ்டார் கம்பெனியாச்சே. ஸ்பெஷல் கௌரவம் பாக்கிறவங்க.

'கல்கி'யில வி.கே.ஆர். தேரோட்டம்னு எழுதினார் இல்லியா. அதுல சொன்னபடி அவங்க கம்பெனி போல இருக்கிற குரூப்தான் அப்படியெல்லாம் போய் எங்க வேணுமின்னாலும் நாடகம் போட முடியும். எங்க கம்பெனியோட சாமான்களை இடம் மாத்தவே ஆறு ஏழு வண்டி வேணும். வி.கே.ஆர். கம்பெனியால வெள்ளைத் துணி வச்சே செட் போட்டு டிராமா போட முடியும். இதை நான் ஏதோ மட்டமா சொல்றதா தயவு பண்ணி அர்த்தம் பண்ணிக்காதீங்க. அவங்க ட்ரூப்ல என்னிக்கு யார் வருவாங்கன்னு தெரியாது. அதனால எல்லோருமே எல்லா பாடத்தையும் 'தரோ'வா படிச்சி எப்பவும் தயாரா இருக்கணும். இப்படி டிரெயினிங் எடுத்ததாலதான் அவங்க எல்லாம் பின்னாடி ரொம்ப பிரமாதமா முன்னுக்கு வந்தாங்க. வி.கே.ஆர். தலைசிறந்த நடிகரானாரு. நாங்க ரொம்ப கௌரவம் பார்த்தது சரியில்லேன்னு எனக்குத் தோணும்.

1936 ஜனவரியில திருச்சிக்கு வந்தோம். அப்போ எனக்கு சம்பளம் போட்டாங்க. மூணு ரூபாயோ மூணரை ரூபாயோ சரியா ஞாபகம் இல்லை. எனக்கு ரொம்ப நாளா பால் சாப்பிடணும்னு பயங்கர ஆசை. நான் மகா மகா சைவம். மாட்டு ரத்தம்தானே பாலா வருதுன்னு பால் கூட குடிக்காம தான் இருந்தேன். கூட இருந்தவங்க எப்படியோ கட்டாயப்படுத்தி, என்னைக் கன்வின்ஸ் பண்ணி 'பால் சாப்பிடலாம் தப்பில்லே'ன்னு நான் நினைக்கற அளவுக்கு என்னை மாத்திட்டாங்க.

அப்ப கம்பெனியில தினமும் பால் சாப்பிட்டாக் கூட மிஞ்சி மிஞ்சிப் போனா மாசம் பத்தணா ஆவும். ஒரு மாசம் பால் வந்தப்போ பார்த்தா ரெண்டு ரூபா ஆகியிருந்தது.

என்ன ஆச்சுன்னா, டிராமா முடிஞ்சி வீட்டுக்கு வர்றப்ப முக்கால்வாசி பசங்களுக்கு படுத்து தூங்கனா போதும்னு தோணிடும். பால் சாப்பிடாமலேயே படுத்துடுவாங்க. உடம்பு நல்லா இருக்கணும்னு ஆசை

உள்ளவன் நான். நெறைய பால் சாப்பிட்டா உடம்பு நல்லா இருக்கும்னு சமையல்காரன் கிட்ட போய், 'பசங்க பாலை என் கணக்கில் எழுதிக்க'ன்னு சொல்லிட்டு அவங்க பாலையும் சேர்த்து குடிச்சிடுவேன். பில் அதிகமா வந்ததும் என்ன காரணம்னு கம்பெனி மானேஜர் சமையல்காரரைக் கேட்க, அவர் இந்த விவரத்தைச் சொல்லியிருக்கார். இதைக் கேட்ட மானேஜர், 'இவனுக்கு யார்ரா பால் கொடுத்தது'ன்னு எளக்காரமா சொன்னார். அவர் 'இவனுக்கு'ங்கற வார்த்தையைச் சொன்னவிதம் என்னை ரொம்பவும் பாதிச்சது. அதாவது இவன் பால் குடிக்கத் தகுதியில்லாதவன்னு அவர் சொல்லாம சொன்னார். நான் வேதனைப்பட்டேன். அப்போ நெனைச்சேன். 'எனக்கு மட்டும் அஞ்சு ரூபா சம்பளம் இருந்தா பால் குடிக்க தகுதி வந்திருக்கும். 'இவனுக்கு'ன்னு மட்டமா பேச மாட்டாங்க.

என் அல்ப புத்தி பாருங்க... அப்ப கூட மூணு ரூபா சம்பளம் அஞ்சு ரூபாயா உயரணும்னுதான் தோணிச்சே தவிர, முப்பது ரூபாய் ஆவணும்னு தோணல்ல.

நான் அனாவசிய செலவு பண்ண மாட்டேன். மாசம் பொறந்தா சம்பளத்தில கொஞ்சம் பணம் வீட்டுக்கு அனுப்புவேன். என் கூட இருந்த முக்கால்வாசிப் பேரு என்னை விட வறுமையான நிலையில் குடும்பம் இருந்தும் கூட.. வீட்டுக்குப் பணம் அனுப்ப மாட்டாங்க. ஜாலியா செலவு பண்ணுவாங்க. நான் சமர்த்தா வீட்டுக்கு பணம் அனுப்பற பையன்னு கம்பெனியில எனக்குக் கொஞ்சம் மரியாதையும் வளர்ந்து வந்தது.

எனக்கு ரொம்பவும் அலர்ஜி இந்த உப்புமா. அன்னிக்கும் பிடிக்காது. இன்னிக்கும் பிடிக்காது. ஒரு இடத்தில இருந்து காலி பண்ணி இன்னொரு ஊருக்குப் போய் செட்டில் ஆறவரைக்கும் எனக்கு ரொம்ப உபத்திரவம். ஏன்னா அப்ப உப்புமாதான். எங்க கம்பெனியில இருந்தது. பெரிய ஆட்டுக் கல். நூத்தி ஐம்பது பேருக்குத் தேவையான இட்லிக்கு மாவு ஆட்டணும்னா நீங்களே கற்பனை பண்ணிக்கலாம். ஊர் ஊரா ஆட்டுக்கல்லும் கூடவே போகும். ஊர் போய்ச் சேர்ந்ததும் ஆட்டுக்கல்லை ஒரு இடத்தில போட்டு மாவு ஆட்ட ரெண்டு மூணு நாள் ஆயிடும். அதுவரைக்கும் உப்புமாதான். நான் என்ன பண்ணுவேன்னா, புது ஊருக்குப் போய் சாமானெல்லாம் இறங்கனதும் மொத வேலையா சமையல்காரர்கிட்ட போய், 'அண்ணே'ன்னு கெஞ்சுவேன்.

"என்ன?"ம்பார்.

"இல்ல... இந்த ஆட்டுக்கல்லை எங்க போடறதுன்னு சொன்னீங்கன்னா... அங்கே போட்டுடுவேன்..."

"இல்ல... இன்னும் யோசனை பண்ணலை..."

"அட... பண்ணி சொல்லுங்கண்ணே..."

"சரி... அங்கே போடு"ன்னு ஒரு இடத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவார்.

---

''ஏதாவது தர்மம் பண்ணுங்க சாமி!''

''ஸாரிப்பா! 'பஸ்ஸுக்கு வெளியே கையை நீட்டக் கூடாது'ன்னு இங்க எழுதியிருக்கு!''





''எனக்கும் மகாராணிக்கும் தகராறு வந்து, சாப்பிடாமலேயே வந்து விட்டேன் அமைச்சரே!''

''கவலையை விடுங்கள் மன்னா! இன்று நகர்வலத்திற்கு இராப்பிச்சை வேடத்திலேயே சென்று விடலாம்!''

– ஞா. ஞானமுத்து

உடனே சிட்டாய் பறந்து போய் என் சினேகிதன்களைக் கூட்டி வந்து ஒரே 'தம்'மா ஆட்டுக் கல்லைப் புரட்டி வந்து அந்த இடத்தில போட்டுடுவேன்.

'போட்டாச்சி' அண்ணே. நாளைக்கு இட்லி போடுங்கண்ணே' - சமையல்காரரை வார்த்தைக்கு நாலு 'அண்ணே' போட்டு கோரிக்கை மனு கொடுத்துட்டுதான் மறு வேலை.

ஆட்டுக்கல்லைத் தூக்கிப் போடறது என் வேலையில்ல. இருந்தாலும் உப்புமா மேல இருக்கிற வெறுப்பு. நமக்கு இட்லி கிடைக்கணுமே. அதனால இந்த வேண்டாத வேலையை ஒழுங்கா பண்ணிடுவேன்.

திருச்சியிலதான் நான் உண்மையில ஒரு நடிகனா வளர்ந்தேன்னு சொல்லலாம். ஏன்னா நானே வலியப் போய் வெவ்வேற வேஷம் வாங்கிச் செய்ய ஆரம்பிச்சேன்.

சமையலும் பண்ணி ஆக்ட்டும் பண்ணிக்கிட்டிருந்த ஒருத்தர் எங்க கம்பெனியில இருந்தாரு. அவரு ஏதோ தகராறு பண்ணிட்டு கம்பெனிய விட்டுப் போயிட்டாரு. அவரு எங்க கூட இருந்தப்ப பண்ண வேஷத்தை என்னோட சீனியர் ஒருத்தர் - சாத்தப்பன்னு பேரு- அவர் பண்ண ஆரம்பிச்சாரு. அவரோ ஆக்டிங் எனக்கே சகிக்கல்லே. எனக்கேன்னு ஏன் சொல்றேன்னா அப்ப நான் கத்துக் குட்டி தான். எனக்கே சகிக்கல்லேன்னா அவரு எவ்வளவு மோசமா ஆக்ட் பண்ணியிருப்பாருன்னு பாத்துக்குங்க.

கிருஷ்ணனைக் கொல்ல முயற்சிக்கிற ராட்சசன் சகடாசூரன் வேஷம் அது.

நான் நேரா முதலாளிகிட்ட போனேன்.

''அந்த வேஷத்தை நான் பண்றேண்ணே...''

''டேய்... சாத்தப்பன் பண்ணிக்கிட்டிக் காண்டா...''

''அவனை விட நான் நல்லா பண்றேண்ணே...''

நான் இப்படிச் சொன்னது அவருக்கு ஆச்சரியம். ஏன்னா அதுவரையிலும் யாரும் அவர் முன்னாடி நின்னு நேருக்கு நேர் இப்படிக் கேட்டதில்லை.

''சரிடா... இன்னிக்கு நீ பண்ணு பாப்பம். நல்லா பண்ணா நாளையில இருந்து நீயே பண்ணு போ.''

எனக்குப் பெரிய சாதனை பண்ணினது போல் செமகுஷி.

அந்த ராட்சச வேஷத்துக்கு அப்ப நடிச்சவருக்கு என்ன டிரஸ் தெரியுமா? தலையில ஒரு விக். ஒரு கருவாள். ஒரு கட்டம் போட்ட ஜிப்பா. அவ்வளவுதான். நானே சின்னப் பையன். இத மட்டும் போட்டா நான் எப்படி ராட்சசன் மாதிரி தெரிவேன்?

அதனால யோசனை பண்ணேன். கடைசில எங்க கம்பெனி நடிகர்கள்கிட்ட அடியும், திட்டும் வாங்கற மாதிரியா ஒரு காரியம் செஞ்சேன்.

(தொடரும்)

---

''மேடம் உங்களுக்கு ஒரு ரசிகர் போன் பண்ணினார்...''

''என்ன விஷயமா...?''

''நீங்க ரொம்ப அழகா இருக்கிறதா வழிஞ்சாரு...''

''அப்படியா? ஹி... ஹி... அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க?''

''ராங் நம்பர்னு!''

— வலங்கைமான் நூர்தீன்



''வாரப் பத்திரிகையில் ஆசிரியரா இருந்தவரை தினசரிப் பத்திரிகைக்கு ஆசிரியராப் போட்டது தப்பாயிடுச்சு!''

''ஏன்?''

''கடைசிப் பக்கத்துல 'செய்திகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே, யாரையும் குறிப்பிடுவன அல்ல'ன்னு போட்டுட்டார்!''

— மேல்மங்கலம் பத்ரா.



# இன்று ரஜினி சீறாதது ஏன்...?



• நிரூபிக்கணும்...

● ஆர். ஜெயசீலன்,
களப்பாள் அஞ்சல்.

? திருநாவுக்கரசை 'உடைந்த ஓடு' என்று நெடுஞ்செழியன் கூறியது பற்றி என்ன கருதுகிறீர்கள்?

! பாவம், 'உதிர்ந்த ரோமம்' என்று அவரால் சொல்ல முடியாதே!

● கே. ஆர். உதயகுமார், சென்னை - 1.

? சென்னை மாநகரப் பேருந்துகளில் பெண்களுக்கான இருக்கைகள் இடப் பக்கத்திலிருந்து வலப்பக்கம் மாறப் போகின்றனவாமே...?



• காதலா...? காரியமா?



• சிற்றலை!



• சொல்ல முடியாதது...!

! பண்பாடு என்பது இருதரப்பிலும் இருந்தால் இடமென்ன வலமென்ன... எல்லாம் ஒன்று தான். பண்பாடு வளர்வதுதான் முக்கியம்.

● ப. சுகுமார், தூத்துக்குடி - 1.

? பல்கலைக்கழகத் தேர்வில் முன்பு காப்பி யடித்த விவரம் தற்போது அம்பலமானதால் கர்நாடகாவில் கல்வித் துறை அமைச்சர் ராஜினாமா செய்திருப்பது பற்றி...?

! இன்றைய அரசியலில் அபூர்வமாகவே காணப் படும் நல்லதொரு முன்னுதாரணம்.

● லீலா இராம், தக்கலை.

? சுதந்தரப் பொன்விழா நாளன்று காலை மாநிலச் செய்தியினை பூர்ணம் விசுவநாதனைக் கொண்டு வாசிக்கச் செய்து சிறப்பித்தது பற்றி...?

! 1947-இல் சுதந்தரச் செய்தி வாசித்தவரைக் கொண்டே வாசிக்கச் செய்துள்ளனர். வரவேற்க லாம். சுதந்தரப் பொன்விழாவையொட்டி இது போன்ற பல நிகழ்ச்சிகள், நாடு தழுவிய ஒரு தேச பக்தி சிற்றலையை உருவாக்கியுள்ளன. அதுவே பேரலையாக வேண்டும்.

● ஏ. காதர், நாகூர்.

?. 'ஜெயலலிதா நகை அணியாதது மிகப் பெரிய தியாகம்' என்று சேடப்பட்டி முத்தையா கூறியிருக்கிறாரே?

! தோற்ற பிறகுதானே இந்த நிலை...! சர்க்கரை வியாதி உள்ளவர்கள் சர்க்கரையே போடாமல் காப்பி குடிக்கிற தியாகம் மாதிரி தான் இதுவும்!

● ராஜி, கமுதி.

? 'பணியிடங்களில் பெண்களை ஆபாசமாகத் திட்டினால் தண்டனை கிடைக்கும்' என்கிற தீர்ப்பு குறித்து...?

! உடல்ரீதியாக வதைப்பதை மட்டுமே பாலியல் குற்றம் என்று சட்டம் இதுவரை சொன்னது. இனி உள்ளத்தளவில் துன்புறுத்து



• சராசரி...?

வதும் பேச்சளவில் சீண்டுவதும் கூட குற்றம் என்று சட்டம் ஏற்கும். ஆனால், சட்டம் சிறப்பாகச் செயல்பட, பெண்கள் துணிந்து முன்வந்து ஆதாரத்துடன் வழக்குத் தொடர வேண்டுமே..!

● என். சலீம்பாஷா, பேர்ணாம்பட்டு.

? இங்கிலாந்து நாட்டு இளவரசி டயானா, எகிப்து நாட்டுப் பட அதிபரைக் காதலிக்கிறாராமே...?

! அது காதலா, இளவரசர் சார்லஸையும் அவருடைய காதலியையும் பழிவாங்கும் உணர்வா...? போகப் போகத்தான் தெரியும்!

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? அ.தி.மு.க. விஞ்ஞான இயக்கமாக மாறி வருகிறது என்கிறாரே ஜெயலலிதா...?

! இனிமேல் ஆட்சிக்கு வந்தால், ஊழல் உள்பட எல்லாவற்றையும் விஞ்ஞானபூர்வமாகச் செய்வார்களாயிருக்கும். உஷாராயிருங்கள்!

● ஜே. பண்டரிநாதன், கும்பகோணம். ❑

? 'எல்லோரும் சமமென்பது உறுதியாச்சு' என்று அமைதியாக இருக்கிறாரே... நண்பர்கள் தவறு செய்தாலும் நியாயப்படுத்த முயலும் சராசரி அரசியல்வாதி போல்தானா அவரும்...?

! ஒரு வாக்காளர் என்கிற முறையில் தேர்தல் சமயத்தில் தமது கருத்தை வெளியிட்டால் போதும்; இடையிடையே புகுந்து முழு அரசியல்வாதியாகத் தன்னைக் காட்டிக் கொள்ள வேண்டாம் என்ற நோக்கமுடையவராக அவர் இருக்கலாம் அல்லவா...?

● கோபி நாகராஜன், கலிங்கியம்.

? 'நான் முதல்வராக இருந்தபோது தமிழக அரசுக்காக வாங்கிய விமானத்தை, யாரும் வாங்க முன்வரவில்லை என்று கூறுவதை ஏற்க முடியாது' என 'ஜெ' சொல்கிறாரே...?

! இவர்கள் முறைப்படி அனுமதித்திருந்தால் 'ஜெ'வே அதை வாங்கியிருக்கக் கூடுமே.

● ஆர். சி. முத்துகண்ணு, இராயப்பட்டி கிராமம்.

? சுதந்தரப் பொன்விழா கொண்டாடும் இந்த நேரத்தில் நாடு முன்னேறியிருக்கிறதா?

! ஹிந்து 17.8.97 நாளிதழில், பால்தாக்கரேயின் சுதந்தரதின பொன்விழா செய்தி வெளியாகியிருக்கிறது. 'ஹிந்துத்வா' பிடிவாதத்தை மூட்டைகட்டி வைத்துவிட்டு மதச்சார்பற்ற கொள்கை பற்றி அதிசயமாகப் பேசியிருக்கிறார், மனிதர்! தாக்கரேயின் இந்த மனமாற்றம் மெய்யானது எனில், அந்த ஒரு காரணத்துக்காகவே இந்தியா சுதந்தரப் பொன்விழா கொண்டாடத் தகுதி பெற்று விட்டது என்று கொள்ளலாம்!

• தியாக முத்திரை!



• சுவதந்தா சாபல்யம்!



• புது....



• ...சாதனை!



• திடீர் (விஞ்)ஞானம்!



இனி ஆடிப் பாடலாமா...?

! George Orwell என்பவர் Animal Farm என்கிற நையாண்டி நாவலில் எழுதியதுதான் நினைவு வருகிறது : All are equal; but some are more equal than others!

● பி. எம். வள்ளி, அரசரடி.

? விடுதலைப் புலிகளைக் கண்டு, இலங்கை அரசை விட இங்குள்ள அ.தி.மு.க., தி.மு.க. அரசுகள் அதிகம் பயப்பட ஆரம்பித்து விட்டனவே...?

! இவர்களுடைய பயம் புலிகளைப் பற்றியல்ல... புலிகளுக்குப் பரிவு காட்டுவதாகக் குற்றம் சுமத்தப்பட்டு விடக்கூடாதே என்ற பயம்தான். ராஜீவ் கொலைக்குப் பிறகு நிலைமை தலைகீழாகி விட்டது.

● அ. கிருஷ்ணகுமார், பு. புளியம்பட்டி.

? வீரப்பனின் செயல் பலமானதா? பலவீனமானதா?

! சந்தனக் கடத்தல், அது தொடர்பான இதர குற்றங்கள் எல்லாமே பலவீனம்தான். நிபந்தனையின்றி சரணடைய முன்வந்தால் மட்டுமே பலசாலி என்று நிரூபித்தவர் ஆவார். நாமும் பாராட்டலாம்.

● தி. சுபாகரன், உடுமலை.

? ஜெ. ஆட்சியில் வெடிகுண்டு கலாசாரம் பிறந்து விட்டது என்று சீறிய ரஜினி, இப்போது

● மல்லிகை மன்னன், மதுரை – 14.

? கிரிக்கெட் விளையாட்டிலிருந்து இந்தியா நிரந்தரமாக விலகிக் கொள்ளும் வாய்ப்பு இப்போது பனிச்சென்று தெரிய ஆரம்பித்து விட்டதே...?

! இரண்டு ரன் தோல்வியில் முடிந்த முதல் சர்வதேச ஒருநாள் போட்டியில் புது சாதனை படைத்த ஜடேஜாவும் அஷாரும் உங்கள் ஆசையில் மண்ணை அள்ளிப் போட்டு விட்டார்களே!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜெ. பண்டரிநாதன்,
44, மூர்த்தி செட்டித் தெரு,
கும்பகோணம் - 612 001.

நான் முதலில் அவளைக் கவனிக்க வில்லை. பத்தரை மணிக்கு இலை போட்டு விடுவதாய் வாக் களித்திருந்தேன்.

பைனாப்பிள் ரசம் அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்தது. பருப்பு வடை இன்னும் பாதி பாக்கி இருந்தது. பால் பாயசம் இன்னும் பக்குவ நிலைக்கு வர வில்லை.

திரும்பினால் நந்தினி கையில் எவர்சில்வர் பேலாவுடன்.



"நீயா..." என்றேன் என்னையும் மீறி.

"சந்துரு..."

அவள் கண்களிலும் திகைப்பு.

"நெய் வேணுமாம்.... சாஸ்திரிகள் கேட் டார்."

"டேய் இச்சா.... நெய்த் தூக்கை எடு.."

வாங்கி பேலாவில் ஊற்றினேன்.

"போதுமா..."

தலையசைத்தாள். எம்காம் படித்த இளை ஞன். அதுவும் நந்தினியைக் காதலிப்பதாய்ச் சொன்னவன் கையில் ஜாரிணிக் கரண்டியு டன் எதிர்பாராத ஒரு திருமண மண்டப சமையற்கட்டில் நின்றால் திகைப்பு வராமல் என்ன செய்யும்?

"நீங்க..."

"அப்பாவுக்கு உடம்பு முடியலே.. என்னை அனுப்பினார். டோட்டலா காண்டிராக்ட் எடுத்திருக்கோம். ஏதாவது ஒரு சின்னத் தப் புன்னாலும் பேர் கெட்டுரும்."

என் பாட்டுக்கு வேலையில் ஆழ்ந்தபடி பதில் சொன்னேன்.

"வரேன்..."

போய் விட்டாள்.

மணி என்னைப் பார்த்தார்.

"யாருடா அது..."

"தெரிஞ்சவள்."

"தெரிஞ்சவளா... இல்லே, ரொம்ப வேண்டியவளா?"

அவரை நிமிர்ந்து பார்த்தேன். கண் களில் குறும்பு கொப்பளித்தது.

"டேய். நானும் உன் வயசைக் கடந்து வந்தவன்தான். காதலியைப் பார்க்கிற பார்வைக்கும் வேற பொண் ணைப் பார்க்கிற பார்வைக்கும் வித்தியா சம் புரியும்டா. கண்ணுல நட்சத்திரம் மின் னும். குரல் குழைஞ்சு நயம் அரிசில வடிச்ச சாதம் மாதிரி..."

பாயசத்தை மேற்பார்வையிடுவது போல

# பசி

நகர்ந்து போனேன்.

நந்தினி. என்னை இந் தக் கோலத்தில் இதுவரை அவன் பார்த்ததே இல்லை. இன்று பார்த்து விட்டாள்.

என்ன நினைத்திருப்பாள்...

நடுவே பந்தியின்போது ஒரு தடவை அப்பா போய் வரு

வார். சமையலின் அன்றைய தரம் பற்றி கணித்து விடலாம் என்பார். 'ரெண்டாந்தடவை கேட்டா டேஸ்ட்டா வந்திருக்குன்னு புரியும்டா. இலையில மீத்திட்டா... ஏதோ தப்பு... உப்பு, புளில மிஸ்டேக்குன்னு அர்த்தம். பாயசம்னா லஜ்ஜைப்படாம வாங்கி உறிஞ்சணும்... ருசி அப்படித் தூண்டணும். ரசத்துல நீச்சல் அடிக்கிற ஆசாமிங்க இருக்கா...'

பேச ஆரம்பித்தால் ஓய மாட்டார். அதுவும் சமையல் பற்றி.

"வேற சப்ஜெக்டே உனக்குத் தெரியாதாப்பா..."

''எதுக்குடா தெரியணும். இதுல மாஸ்டர் ஆகணும்னா... இதுலயே தோயணும்... அப்படியே கரைஞ்சு போகணும்."

வாஸ்தவம்தான். அப்பாவின் கைத்திறனுக்கு இந்தக் காலம் மாதிரி என்றால் ஏதேனும் 'அரசு'ப் பட்டம் கிடைத்திருக்கும். இருபது வருஷம் முன்னால் வந்து விட்டார்.

மணி என்னைப் பார்த்தார்.

"நீ போறியா... நான் போகட்டுமா..."

நான் கூச்சப்படுகிறேன் என்று நினைத்து விட்டார்.

"நானே போறேன்."

கல்யாணப் பெண்ணின் தகப்பனார் நின்றிருந்தார்.

"கூட்டு, கறி விசாரிச்சு போடச் சொல்லுங்கோ. ரொம்ப பேர் இலை காலியா இருக்கு."

சுட்டிக்காட்டினேன் புன்னகையுடன்.

"இதோ... வராங்களே... எல்லாம் கரெக்டா செய்வா. அப்பாவோட டிரெய்னிங்."

திருப்தியாய் என்னைப் பார்த்தார்.

"அப்பாவால வர முடியலேன்னதும் பயந்து போயிட்டேன். நல்லவேளை... பயப்பட்ட அளவு எதுவும் ஆகலே.. ரொம்ப நல்லா அமைஞ்சிருக்குன்னு சம்பந்தி வீட்டுலயே சொல்லிட்டாங்க... அப்பாவை விட புகழ்ல மேல போயிருவீங்க..." என்றார்.

"அப்பா பேரைக் காப்பாத்தினாலே போதும்" என்றேன் தன்னடக்கமாய்.

"சாயங்காலம் ரிசப்ஷனுக்கு எப்படியும் முன்னூறு பேர் வருவாங்க."

"ஒண்ணும் கவலைப்படாதீங்க..." என்றவன் பார்வையில் மீண்டும் நந்தினி தென்பட்டாள்.

யாரோ சிநேகிதிகளை அமரவைத்து சாப்பாடு விசாரித்துக் கொண்டிருந்தவள் என்னைப் பார்த்ததும் பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

ஏதோ உறுத்தியது. நந்தினியால் எனது இந்த வேஷத்தை ஜீரணிக்க முடியவில்லை.

யாரோ ஏதோ கேட்டதைக் கவனிக்கவில்லை. தொய்ந்து போய் உள்ளே திரும்பியிருக்கிறேன். மணி பின்னால் வந்து தோளைத் தட்டினார்.

"ஏண்டா... பால் பாயசம்... நீங்க வச்சா மட்டும் எப்படி இவ்வளவு டேஸ்ட்டா இருக்கு... நாங்க வீட்டுல பண்ணா இந்த ருசி வரலியேன்னு அந்த மாமி கேட்கறா. நீ பாட்டுக்கு ஸ்வப்னத்துல நடக்கிற மாதிரி நடந்து வரே..."

வருத்தமாய் முனகினேன்.

"என்னடா... உடம்பு சரியில்லையா... காலைல சீக்கிரம் எழுந்ததா... பேசாம கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடு.. போ... உனக்கு இன்னும் இது பழக்கம் ஆகலே..." என்றார் வாஞ்சையாய்.

மூலையாய்ப் போய்ப் படுத்து விட்டேன்.

என்னையும் மீறி கண்ணீர் பெருகி இருக்க வேண்டும். அறிவு கை விட்டு உணர்வின் ஆதிக்கம். பச்சைக் குழந்தை போல மனசு தேம்பியது.

யாரோ என்னை எழுப்புகிற சத்தம்.

"சந்துரு... சந்துரு..."

திடுக்கிட்டு விழித்தேன்.

"என்னடா... சாப்பிடாமே தூங்கிப் போயிட்டே."

மணிதான். எழுந்து அமர்ந்தேன். நினைவும் கனவுமாய் மனஉளைச்சல். சுத்தமாய் அழியாத சித்திரமாய் நந்தினியின் முகந் திருப்பல்.

"வா... வெறும் வயிறோட இருக்காதே..."

"ப்ச்... எனக்குப் பசிக்கலே..."

"ஆனா... நந்தினிக்குப் பசிக்கிறதாம்."

என்ன சொல்கிறார்... திகைப்புடன் பார்த்தேன். பின்னால் நந்தினி.

"நீ சாப்பிடலேன்னு தெரிஞ்சதும் உன்னோடதான் சாப்பிடுவேன்னு நிக்கறா... பரவாயில்லை. எழுப்புங்கோன்னு சொன்னா. அதனாலதான் உன்னை உலுக்கினேன்."

எழுந்து நின்றேன்.

"பரிமாறின இலையைப் பார்த்தே தரம் கண்டுபிடிக்கற ஆசாமி. பெண்ணோட மனசைப் புரிஞ்சுக்க மட்டும் முடியலியாக்கும். நானும் உங்க அப்பா மாதிரிதான். வாக்கு கொடுத்தா... நிறைவேத்தற டைப்... செய்யிற காதல்ல தோயற ரகம்..."

பக்கத்தில் அமர்ந்து கிசுகிசுப்பாய்த்தான் சொன்னாள். டைனிங் ஹால் முழுக்க எதிரொலிக்கிற பிரமை எனக்குள்.

---

"என் மாட்டுப் பொண்ணு என்னை தெய்வமா நினைக்கிறா!"

"அதை ஏன் இவ்வளவு சலிப்பா சொல்றே!"

"அட நீ வேறே! ஏதாவது பட்சணம், பண்டம் செஞ்சா என் கண்ணிலே காட்டிட்டு எடுத்துட்டுப் போயிடறா!"

— ஏ.ஜி. வல்லபதாஸ்



## ஸ்வீட் வாங்கி அவமானம்

சிலர் கடைகளில் பட்சணங்களை வாங்கும் போது அந்த பட்சணத்தை கொஞ்சம் கேட்டு வாங்கி, சாப்பிட்டு பிறகு வாங்குவார்கள். இதை அநாகரிகமாகக் கருதி நான் கேட்பதில்லை. இப்படி செய்யாதது எவ்வளவு பெரிய தவறு என்பதை சமீபத்தில் புரிந்து கொண்டேன். சமீபத்தில் கும்பகோணம் டவுனில் உள்ள ஒரு ஸ்வீட் கடையில், பால் ஸ்வீட் ஒரு கிலோ வாங்கினேன். உறவினர்களிடம் சென்று கொடுத்தபோது மரியாதை நிமித்தம் உடனே பிரித்து எனக்கு ஒன்றை சாப்பிடக் கொடுத்தனர். ஆசையாக அதை வாங்கிச் சாப்பிட்ட எனக்கு அதிர்ச்சி! ஆமாம். அது இறுகிப் போய் கெட்டிருந்தது!! இதனால் ஏற்பட்ட அவமானத்திலிருந்து நான் இன்னும் மீளவில்லை!

ராஜிராதா.
திருச்சி - 14.

## கான்வெண்ட் கனவுகள்

இன்றைய சமுதாயத்தில் பாமரன் கூட, அவனது பிள்ளைகளை இங்கிலீஷ் மீடியம் பள்ளிகளில் படிக்க வைக்கப் பிரியப்படுகிறான்.

இதனால் இங்கிலீஷ் மீடிய கான்வெண்ட் ஸ்டைல் (அங்கீகாரம் இல்லாத) பள்ளிகள் ஆங்காங்கு புற்றீசல் போல் முளைத்து வருகின்றன. மக்களின் கான்வெண்ட் மோக பலவீனங்களைப் பயன்படுத்தி, காசு பறித்து கொழுக்கின்றன, இப்பள்ளி நிர்வாகங்கள். எனவே தமிழக அரசு இந்த ஆண்டு முதல், நகராட்சிப் பள்ளிகளிலும் இலவச இங்கிலீஷ் மீடியத்தை அறிமுகம் செய்யுமா?

தஞ்சாவூர், பி.ஹெச். கைலாஷ்.

## தமிங்கிலீஷ் பிரச்னை

ஆங்கிலமும் தமிழும் கலந்து பேசுகிறோம். ஆங்கிலம் பேச விரும்புபவர்கள் முழுமையாகப் பேசினால் அந்த மொழியாவது உருப்படும். அதோடு தமிழையும் கலந்து பேசி தமிழைக் கெடுக்காதீர்கள் என்ற அமைச்சர் தமிழ்க்குடிமகனின் கருத்து நியாயமானதுதான். ஆனால் இவ்விதம் தமிங்கிலீஷ் பேசும் முறையை ஆரம்பித்து வைத்தது தனியார் தொலைக்காட்சி அறிவிப்பாளர்கள்தானே! இதைக் காணும் இளைய சமுதாயம் இதுதான் இன்றைய நாகரீகமென நினைத்து அவ்விதமே பேசுகிறார்கள். இதை அமைச்சர் நிஜமாகவே தடுக்க விரும்பினால், தனது பணியை சன் டீ.வி (மன்னிக்க, சூரிய தொலைகாட்சி)யிலிருந்து தொடங்கலாமே!

அந்தணப்பேட்டை,
அண்ணா அன்பழகன்.

## கான்வென்ட் கனவுகள்!

திருச்சி

## தாமதத்தால் துயரம்

ஆதிதிராவிட மற்றும் பழங்குடி பள்ளி மாணவ மாணவியருக்கு ஆண்டுதோறும் தமிழக அரசு இலவச பாடப் புத்தகங்களை வழங்கி வருகிறது. ஆனால் இப்புத்தகங்கள் உரிய காலத்தில் வழங்கப்படாமல் மிகவும் காலம் தாழ்த்தி வழங்கப்படுகிறது. அரசின் இலவசப் பாடப்புத்தகங்கள் கிடைப்பதற்குள் முதல் மாதத் தேர்வுகளும் முடிந்து விடுகின்றன. இதனால், மாணவ மாணவியர் அரசின் இலவச பாடப் புத்தகங்களை எதிர்நோக்காது, கடைகளில் நேரடியாக விலை கொடுத்து வாங்க வேண்டியதுள்ளது.

தூத்துக்குடி - 1, ப. சுகுமார்

# மும்பை மசாலா :

## நவீன தண்டி மார்ச்

சுதந்தரப் பொன்விழாவை, சென்ட்ரல் ரயில்வே பயணிகளைப் போல வேறு யாருமே இவ்வளவு "சிறப்பாக"க் கொண்டாடி இருக்க முடியாது! புதிய அட்டவணையை எதிர்த்து, "மும்ரா"வில் நடந்த ஆர்ப்பாட்டத்தில் ஒரு ரயில் பெட்டி எறிக்கப்பட, வழக்கம் போல ரயில் போக்குவரத்து, ஒரே வாரத்தில் மூன்றாவது முறையாக ஸ்தம்பித்தது. அறிவிப்புகள் ஏதுமில்லாததால், மற்ற ஸ்டேஷன்களிலிருந்து புறப்பட்ட ரயில்கள் எல்லாம் மும்ராவில் வந்து, ரயில் பேரணி போல் அணிவகுத்து நின்றன. 8:30 மணியிலிருந்தே உள்ளே உட்கார்ந்து கொண்டிருந்த பயணிகள், சந்நியாசிகளாகும் தருவாயில், ஒருவழியாக 11 மணிக்கு 'இனி ரயில்கள் ஓடாது' என்ற அறிவிப்பு கேட்டு, ஆவேசத்துடன் தண்டவாளத்தின் மீதே (இரு பக்க மழைச் சேறு பயமுறுத்த) தொலைதூர டோம்பிவிலி, கல்யாண் இல்லங்களை நோக்கி நடை போட ஆரம்பித்தார்கள். "காந்திஜியாவது ரோடில் நடந்தார்; சுதந்திர இந்தியாவில் இப்படி கல்லிலும் கட்டையிலும் கால் நோக நடக்க வேண்டும் எனத் தலையில் எழுதியிருக்கிறதே" என நொந்தனர் பலர்; "ஒரு காலை மாமியாரும், ஒரு காலை கணவரும் மஸாஜ் செய்தால்தான், நாளை காலை ஆபீஸ் போகலாம்" எனக் கிண்டலடித்துக் கொண்டிருந்தார் ஒரு பெண்! ஒருகால் நிறைவேறியிருக்குமோ?



• திலீப் குமார்



# ஏழுவர்ண பிரியாணி!

## கழுதை ஹீரோக்கள்!

சுதந்தர தினத்தை குப்பையற்ற தினமாக (Zero garbage day) கொண்டாட, 'BMC' முடிவெடுத்தாலும் எடுத்தது, ஸ்கூல் குழந்தைகளெல்லாம் துடைப்பமும் கையுமாக ஆகிவிட்டனர். வீட்டில் தூசு தட்டாத குழந்தைகள் கூட, டீச்சர்களின் மேற்பார்வையில் "குப்பை" கொட்டிக் கொண்டு, டீவியில் பேட்டி எல்லாம் கொடுத்தனர். 'BMC'யின் காலடி இது வரை படாத சில இடங்களில் – முக்கியமாக ரயில்வே ட்ராக்குகளின் பக்கங்களிலிருக்கும் குடியிருப்புகள் – குவிந்திருக்கும் இமாலயக் குப்பையை மனிதப் பிரயத்தனத்தால் அகற்ற முடியாதென்பதால், கழுதைகளை ஏவிவிட்டனர். அவையும் குப்பைப் பொதிகளைச் சுமந்து கொண்டு, ஸ்டைலாக, டீவிக்கும் நியூஸ் பேப்பர்களுக்கும் போஸ் கொடுத்தன. கார் பேஜ் ஹீரோவாகியதோ இல்லையோ (அதெல்லாம் நடக்கிற காரியமா?) கழுதைகள் ஹீரோவாயின!

## மூடியது கதவு! திறந்தது வாய்!

'டி' ஸீரீஸ் மன்னன் குல்ஷன் குமாரை ரவுடிகள் துரத்தியபோது, அவர் முதலில் தஞ்சம் அடைந்தது திருமதி டிசௌசாவின் வீடு! அவர் கதவைத் தட்ட, இவர் திறக்கலாமா வேண்டாமா என்ற போராட்டத்துக்குப்பின், கதவை நோக்கி ஓரடி வைக்க, கூடவே இருந்த தோழி தடுக்க, அதற்குள் குல்ஷன் குமார் அடுத்த வீட்டுக் கதவை நோக்கி ஓடிவிட்டிருந்தார். கடைசியில் எல்லாக் கதவுகளுமே மூடப்பட, குல்ஷனின் முடிவு டிசௌசாவை உலுக்கி விட்டது. "நான் மட்டும் தைரியமாகக் கதவைத் திறந்திருந்தால் காப்பாற்றி இருக்கலாமே" என்ற உறுத்தல், புலம்பலாக மாறி, இறுதியில் கொலை சம்





பந்தமான சாட்சியம் சொல்வது மூலம், ஓரளவு பிராயச்சித்தம் செய்யலாம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறார். இவரால் ஊக்கம் பெற்ற வேறு சிலரும் பயமின்றி சாட்சி சொல்ல முன் வந்திருக்கின்றனர். டீவி, செய்தித்தாள்கள் மூலம் இப்போது ஓரளவு டிசௌசாவின் முகம் பரிச்சயமாகி விட்டது. அடுத்து அவருக்கு ஆபத்து ஏற்படாதிருக்க வேண்டுமே என்ற பிரார்த்தனையை ஆரம்பிக்க வேண்டும்!

## 'ட்ரைகலர்' மேனியா

சுதந்தர தினத்தன்று, பொன்விழா ஆண்டை ஒட்டி, மும்பை முழுதும் மூவர்ண மோகம் தலைவிரித்தாடியது. தேசியக் கொடியின் வர்ணங்களில் ஸ்டிக்கர் பொட்டுகள், பனியன்கள், சாரிகள், 'ராகி'கள், மலர் மாலைகள், பூக் கதம்பங்கள், ஐஸ்க்ரீம்கள், கேக்குகள், லட்டுகள், சில ஹோட்டல்களில் மூவர்ண பிரியாணிகள்; பல்புத் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த சில பில்டிங்குகளும் மூவர்ண லைட்டில் மின்ன... அப்பப்பா... யானையின் நெற்றியில் கூட மூவர்ண நாமம்! 'ட்ரைகலராஸீஸ்' என்று ஏதாவது ஜுரம் பரவுவது ஒன்றுதான் மிச்சமாக இருந்தது!

## வாங்கு! வாங்காதே!

பாகிஸ்தான், தனது சுதந்தரப் பொன் விழாக் கொண்டாட்டங்களை ஒட்டி, ஸிவிலியன் அவார்டுகளிலேயே மிகச் சிறந்ததான "நிஷானி இம்தியாஜ்" விருதை, இந்தி(ய) நடிகர் திலீப் குமாருக்கு அளித்து கௌரவித்திருக்கிறது. இந்தியப் படங்களுக்கு பாகிஸ்தானில் தடை விதிக்கப்பட்டிருந்தபோதும், ஒரு இந்திய நடிகருக்கு விருதளித்திருப்பது இதுவே முதல் முறை! ஆனால் அந்த விருதை திலீப்குமார் ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று 'பானும் காஷ்மீர்' இயக்கத்தைச் சார்ந்த காஷ்மீர் பண்டிட்டுகள் கூக்குரலெழுப்புகின்றனர். "காஷ்மீரை விட்டு எங்களை விரட்டியவர்களே இந்தப் பாகிஸ்தானியர்தான்! அண்மையில் கூட, "காஷ்மீர் இன்றி பாகிஸ்தான் முழுமை பெறாது" என்பதாகத்தான் அதன் பிரதமர் உரையாற்றியிருக்கிறார். பிரிவினைவாதம் பேசுபவர்களின் விருதை ஏற்பதாவது?" என்பது இவர்கள் வாதம். பாவம்; டிராஜிடி மன்னனுக்கு, விருதை வாங்குவதா, வாங்காமலிருப்பதா என்ற டிராஜிடி!

## விருது வேண்டுமா? வாங்கு லஞ்சத்தை!

'சிறப்'பாகப் பணியாற்றியதற்காக, 'மெடல்' அளித்து ஜனாதிபதியால் கௌரவிக்கப்பட்ட மும்பை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர், விருது வாங்கிய கையுடன், லஞ்சம் வாங்கிய குற்றத்திற்கு, ABC (anti corruption bureau) வால் கைதாக்கப்பட்டிருப்பது, இதுவரை மும்பையின் போலீஸ் சரித்திரத்திலேயே இடம் பெறாத அசம்பாவிதம்! மாதா ரமாபாய் அம்பேத்கர் மார்க் போலீஸ் ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றும் L.B. ஷேக்கிடம் ஒரு கேஸ் மாட்டியது. காரணம், ஷிப்பிங் கம்பெனிகளுக்கிடையே 'டெமோரேஜ்' கட்டாத விஷயமாகத் தகராறு. இது 'கிரிமினல்' கேஸ் என்று ஜோடித்து, சம்பந்தப்பட்ட கம்பெனி ஒன்றின் ஏஜெண்டை உள்ளே தள்ளுவதாக இருந்தார் ஷேக். ஏஜெண்டின் அண்ணன், சட்டப்படி இது கிரிமினல் கேஸே அல்ல என்பதைச் சுட்டிக்காட்டியும், இவர் விடுவதாக இல்லை! கடைசியில், ஐந்து லட்சம் தந்தால், "கண்டுகொள்ளாமலிருப்பதாக" இவர் கூற, முதல் இன்ஸ்டால்மெண்டாக 50,000த்தை கொடுப்பது போல் கொடுத்து, லஞ்ச ஒழிப்பு அதிகாரிகளிடம் மாட்டிக் கொடுத்து விட்டார் புத்திசாலி அண்ணன். பாவம்! விருதைப் பெறுவதற்கு, ஷேக், யார் யாருக்கு எவ்வளவு கொடுத்தாரோ? அதை வசூலிப்பதில் ஆனாலும் இவ்வளவு அவசரம் காட்டியிருக்க வேண்டாமோ?

— ஜெயஸ்ரீராஜ்

"நாகஸ் காப்பி' பொன்விழா கொண்டாடிய சமயம். எல்லோரும் மிகவும் ரசிக்கும்படியாய் ஒரு விளம்பரப்படம் எடுத்துத் தரும்படிக் கேட்டார்கள். அப்போது உருவாக்கப்பட்டதுதான் உசிலைமணி நடித்த "பேஷ்... பேஷ்... காப்பி ரொம்ப நன்னா இருக்கு" விளம்பரம். ஷூட்டிங் முடித்து விட்டு, உசிலைமணி, ஊருக்குப் போய் விட்டார். அவருக்காக நானே குரல் பேசிவிட்டேன். சென்னை திரும்பியபின், விளம்பரத்தைப் பார்த்த உசிலைமணி, "பேஷ்! பேஷ்! உங்கள் குரலே பிரமாதமாய் இருக்கு. நான் பேச வேண்டிய அவசியமே இல்லை" என்று பாராட்டினார்" என்று நினைவு கூர்கிறார் எஸ்.வி. ரமணன்.

அவரது ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் நிறுவனம் வெள்ளிவிழா கொண்டாடுகிறது. சூப்பர் ஸ்டார் ரஜினி கலந்து கொள்ள, கலகலப்பான விழா ஏற்பாடுகளில் பிசியாய் இருந்த ரமணன், மேலும் சில அனுபவங்களை நினைவு கூர்ந்தார்.

● விஜய் உரம் பற்றிய விளம்பரப்படத்துக்கு, ஒரு பெண் மாடல் தேவைப்பட்டார். டான்ஸ் மாஸ்டர் ரகுராம் (என் உறவுதான்) குச்சுப்புடி டான்ஸர் ஒருவரை அறிமுகப்படுத்தி வைக்க, அவரை ரொம்ப கன்வின்ஸ் செய்து, உர விளம்பரத்தில் தோன்றச் செய்தோம். அவர்தான், பின்னர் சினிமாவில் நுழைந்து, சங்கராபரணம் படம் மூலம் மிகப் பிரபலமடைந்த மஞ்சு பார்கவி.

● இளையராஜா, கங்கை அமரன், மலேசியா வாசுதேவன் மூவரும் சினிமாவில் நுழைவதற்கு முன்னர், எங்களுடன் இணைந்து பணியாற்றியுள்ளனர். வி.ஜி.பி.யின் தவணைத் திட்டத்துக்காக, அப்போது வெளியாகி, ஹிட்டான ஞான ஒளி படத்தில் இடம் பெற்ற 'தேவனே! என்னைப் பாருங்கள்' பாடல் மெட்டில் நானும், கங்கை அமரனும் பாட்டெழுத, இளையராஜா இதார் இசைக்க, மலேசியா பாடினார். அதற்கு மக்களிடையே நல்ல வரவேற்பு. ஒருநாள் ஷூட்டிங்கின் போது, மேக்அப் போட்டுக் கொண்டிருந்த சிவாஜியிடம், அந்த விளம்பரப் பாடலைப் போட்டுக் காட்டியபோது, சிரித்து, ரசித்தார்.

● 'Oh! God' என்ற ஆங்கிலப் படத்தைப் பார்த்த பாதிப்பில் நான், ரகுராம், ராம்ஜி மூவரும் 'உருவங்கள் மாறலாம்' என்ற படத்தை எடுத்தது ஒரு இனிய அனுபவம். சிவாஜி, ரஜினி, கமல், ஜெய்சங்கர், சுகாசினி, சில்க் என்று பல முன்னணி நட்சத்திரங்களும் நடித்தார்கள். ஒய்.ஜி மகேந்திராதான் ஹீரோ. அத்தனை நட்சத்திர[ங்]களையும் நாங்கள் உரிமையுடன் அணுக[,] அவர்களும் அன்போடு ஒத்துழைத்தார்கள். அவர்கள் எல்லாம் ஊதியம் பெறாமல், சி[று] அன்புப் பரிசு மட்டுமே பெற்றுக் கொண்ட[து] எனக்குக் கிட்டிய பெரிய கௌரவம்!

வர்த்தக ரீதியிலும் அது லாபம் ஈட்டி[க்] கொடுத்தது.

சிவாஜி சம்பந்தப்பட்ட காட்சிகளை ஒ...



• ரமணன்

# மறக்க முடியுமா மர்ம மனிதர்களை

நாளில் எடுத்து முடித்தோம். (சிவாஜிக்கு கடவுள் கேரக்டர்) அன்று மொத்த யூனிட்டுக்கும், தம் வீட்டிலிருந்து சைவம் + அசைவ உணவு வரவழைத்து விருந்து கொடுத்தார் சிவாஜி.

• 95ம் ஆண்டு, டிசம்பர் 11, 12ம் தேதிகளில் தூர்தர்ஷனில் ரஜினி பேட்டி ஒளிபரப்பானதை மறக்க முடியுமா? ஆனால் அந்த நிகழ்ச்சிக்கான கேஸட்டை தூர்தர்ஷன் அலுவலகத்துக்குக் கொண்டு போகாமல் தடுக்க, சில மர்ம மனிதர்கள் ஆட்டோக்களில் கத்தி, உருட்டுக்கட்டை சகிதம் வந்திருப்பதை, தெருக் கோடிக்கடையில் டீ குடிக்கச் சென்ற எங்கள் ஊழியர் ஒருவர் பதற்றத்துடன் வந்து கூறினார். ஒரு ஒரிஜினல் + நாலு டம்மி கேஸட்களுடன், எங்கள் அலுவலகத்திலிருந்து ஐந்து கார்களில் ஐந்து வெவ்வேறு ரூட்களில் புறப்பட்டுச் சென்றோம். ஆட்டோக்களில் எதிரிகள் பின் தொடர, சினிமாக்களில் மட்டுமே பார்த்திருக்கிற திரில்லிங் சீன்கள் அரங்கேறின. ஆட்டோவுக்கு டிமிக்கி கொடுத்து விட்டு, ஒரிஜினல் கேஸட்டை தூர்தர்ஷன் கேந்திராவில் சேர்த்த அனுபவம், ஆயுசுக்கும் மறக்காது.



• ரஜினியுடன்

• மனு நீதி மன்றம். இது ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் வழங்கிய டி.வி நிகழ்ச்சி. வாரந்தோறும், மக்களின் குறைகளை அரசின் கவனத்துக்குக் கொண்டு சென்ற பயனுள்ள நிகழ்ச்சி அது. வட சென்னையில் உள்ள கந்த கோட்டத்தில் விசித்திர பிரச்னை, மனுநீதி மன்றத்தில் அலசப்பட்டது. வழக்கமாய், லோக்கல் வியாபாரிகள், பக்தர்கள் உதவ, உண்டியலைத் திறந்து, காசு, பணத்தை எடுத்து, எண்ணி, வங்கியில் சேர்க்கும் பணி ஞாயிற்றுக்கிழமைகளில்தான் நடைபெறும்.

ஆனால், கோவில் அதிகாரி, அரசு ஊழியர்களுக்கு ஞாயிறு விடுமுறை நாள் என்று கூறி விட, உண்டியல் பல மாதங்களாய் திறக்கப்படாமல், நிரம்பி வழிந்தது. கோவில் உண்டியலில் காணிக்கை ஏதும் போட வேண்டாம் என்று வேண்டுகோள் விடுக்கிற நிலைமை ஏற்பட்டு விட்டது.

மனு நீதி மன்றத்தில் இது விவாதிக்கப்பட, அரசின் கவனத்துக்குச் சென்றது பிரச்னை. மறுவாரமே உண்டியலைத் திறந்து, காணிக்கைகளை எண்ண உத்தரவாகியது!

• கல்கி பத்திரிகைக்காக, விவித பாரதியில், 'நேரம் நல்ல நேரம்' நிகழ்ச்சியை ஓர் ஆண்டுக்கு வியாழன் தோறும் வழங்கியது இனிய அனுபவம். வைரமுத்து, கமல், கே. பாலசந்தர், ம.பொ.சி. எஸ்.பி. முத்துராமன், மு. மேத்தா என்று பலர் பங்கேற்ற நிகழ்ச்சியை 'அறிவு பூர்வமான, அருமையான நிகழ்ச்சி' என்று ஆல் இந்தியா ரேடியோவே பாராட்டியது குறிப்பிடத்தக்கது.

சந்திப்பு : **கௌதம்**

# முடிந்தது

- உன்னை அடைவதற்கான
தடைகளை உடைக்கும்
தைரியமேதும்
இல்லை என்னிடம்.

- என்னைச் சேருவதிலான
உன் ஆசைகளை நொறுக்கும்
எதிர்ப்புகளுக்கெதிராக
செய்ய இயலாது
உன்னால் எதுவும்.

- நாளை
உனது பிள்ளைகளை
தைரியமாகக் காதலிக்கவிடு.
நானும்தான்.

- நம்மை அடையாளப்படுத்தி
கௌரவித்த காதலுக்காக
வேறென்ன
செய்ய முடியும் நாம்?

– க. அம்சப்ப்ரியா

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka